# கல்கி

KALKI 17-6-79
75 காசு



தமிழக முன்னேற்றம்:

முதல்வர் பேட்டி

★

கலைஞரின் கருத்துக்கள்

# வியக்கும் ஒளியும் ஒலியும் எவரையும் மயக்கும்

# புதிய சாலிடெர் டீலக்ஸ் TS62




அறிமுகப் படுத்துகிறோம். நீங்கள் ஒரு டீலக்ஸ் டிவியில் எதிர்பார்க்கும் அம்சங்களுக்கு மேல் பல சிறப்பான அம்சங்கள் பெற்ற சாலிடெர் டீலக்ஸ் TS 62 மாடல். கைதேர்ந்த எலக்ட்ரானிக்ஸ் வல்லுனர்களால் தயாரிக்கப்படும் இந்த டிவி, இந்தியாவிலேயே முதன் முறையாக 10 வாட் ஹை-ஃபை ஒலி பெருக்கி கொண்டது. இதில் ஒளியும், ஒலியும் தனித்தன்மை வாய்ந்தவை.

இதன் வசீகர தெளிவான ஒளிக்குக் காரணம்:

- 100% முழுமையான 'சாலிட் ஸ்டேட்' அமைப்பு
- விஷன் இன்டர்மீடியட் ப்ரிகுவன்ஸியில் (Vision Intermediate Frequency) புதிய கண்டு பிடிப்பினால் உன்னதமான, நடுக்கம் இல்லாத நிலையான படம்.
- இறக்குமதி செய்யப்பட்ட பிக்சர் டியூப்

இணையில்லாத ஒலிக்குக் காரணம்:

- இதன் உயர்ந்த ஹை-ஃபை ஒலி பெருக்கி 10 வாட் சங்கீத சக்தி கொண்டது.
- பிலிப்ஸ் பெரக்ஸ்டியூர் ரியல் கோன் ஸ்பீக்கர்
- பிரத்தியேக 'பாஸ்', 'டிரெபிள்' கன்ட்ரோல்

டிவியுடன் உங்கள் AM/FM டியூனர், ரெகார்டு பிளேயர், டேப்ரெக்கார்டர் முதலியவற்றையும் இணைக்கலாம்.
புதியதாக கையாளப் பட்டுள்ள நவீன முறை உங்கள் டிவியை பருவ மழைக்காலத்தில் பாதுகாக்கிறது.

ஹை-பீம் எலக்ட்டிரானிக்ஸ் பிரைவேட் லிமிடெட்,
சென்னை-600 020 போன்: 412281, 413098

# Solidaire

**SOLID STATE TV**

**– that seldom fails!**

ARIES.HE.285










## இந்த இதழ்.....

ஜூன் 17ம் தேதி கல்கி தமிழக முன்னேற்றச் சிறப்பிதழாக மலரும் என்று நாம் வெகு காலம் முன்பே முதலில் அறிவித்தபோது தஞ்சை இடைத் தேர்தல் பற்றிய பேச்சே இல்லை.

ஆனால் இந்த இதழுக்கான வேலைகளை நாம் தொடங்கியபோது இடைத் தேர்தல் சூடுபிடித்து அனைவருக்கும் தலைக்குமேல் வேலை, பரபரப்பு, அவசரம்.

இருந்தாலும்கூட நமது கோரிக்கைகளை ஏற்று முதல்வரும், கலைஞரும் மற்றவர்களும் நேரம் ஒதுக்கிக்கொண்டது கல்கி பத்திரிகை, அதன் ஸ்தாபகர்கள், வாசகர்கள் ஆகியோரிடம் அவர்கள் கொண்டுள்ள அன்பையும் மதிப்பையும் உணர்த்துகிறது. செய்தித் துறை அமைச்சர் திரு வீரப்பன் உள்பட இந்த இதழின் சிறப்புக்கு உதவியவர்கள் பட்டியல் மிக நீண்டது. ஒருவர் விடாமல் அனைவரையும் நன்றியுடன் எண்ணி வந்தனம் தெரிவிக்கிறோம்.

# தமிழக முன்னேற்ற சிறப்பிதழ்

இந்த இதழில் வெளியாகியுள்ள பல்வேறுபட்ட கருத்துக்களை ஆழ்ந்து நோக்கிப் பயனடைவதுடன் 'தமிழக முன்னேற்றத்துக்குச் சிறிய அளவிலோ பெரிதாகவோ நாம் என்ன செய்யப் போகிறோம்?' என்றும் நம்மை நாமே கேட்டுக்கொள்வோமாக.









# தமிழக முன்னேற்றம்

## மாண்புமிகு திரு எம்.ஜி. இராமச்சந்திரன் தமிழக முதல்வர்



**கேள்வி 1:** தொழில் அமைச்சராக திரு ஆர். வெங்கடராமன் அவர்கள் இருந்த காலத்தில் தமிழகம் தொழில் துறையில் இரண்டாவது இடம் பெற்றிருந்தது. இன்று ஐந்து அல்லது ஆறாவது இடத்திற்குத் தள்ளப் பட்டிருக்கிறது. இதன் காரணம் என்ன? பழைய நிலைமைக்கு நாம் திரும்பி வர நாம் என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்? இதன் தொடர்பாக என்னென்ன நடவடிக்கைகள் மேற்கொண்டு வருகிறீர்கள்?

பதில்: பதிவு பெறாத தொழிற்சாலைகளில் தொழிலாளர்களில் சுமார் 77 சதவிகிதத்தினர் பணி புரிகின்றனர். இவைகளைப் பற்றிய சரியான புள்ளி விவரங்கள் கிடைக்காமையால், மாநில அல்லது மாவட்ட ரீதியில் தொழில் வளர்ச்சி பற்றி ஆய்வு செய்ய இயலவில்லை. இருப்பினும் பதிவு செய்யப்பட்ட தொழிற்சாலைகளைக் கணக்கில் எடுத்துக் கொண்டு பார்க்கும் பொழுது மாநிலத்தில் வருவாய்க்குக் கூடுதலாகச் சேர்க்கப்பட்ட உற்பத்தியை அளவுகோலாக வைத்துக் கொண்டு தமிழ்நாட்டின் தொழில் வளர்ச்சியைப் பற்றி ஆய்வு செய்ய ஒரு முயற்சி செய்யப்பட்டது. இதன்படி 1965–66ம் ஆண்டில் நாட்டின் பொருளாதார வளர்ச்சியில் தமிழ்நாட்டின் பங்கு 9 சதவிகிதமாக இருந்தது. 1975–76ல் 8.5 சதவிகிதமாகக் குறைந்தது. எனவே 1965–66ல் தொழில் வளர்ச்சியில் 3–வது இடத்தைப் பெற்று இருந்த தமிழ்நாடு 1975–76ல் 4–வது இடத்தை அடைந்தது எனத் தெரிய வருகிறது.

2. தொழில் வளர்ச்சியின் மந்தநிலைமைக்கு

1) மின்சாரத் தட்டுப்பாடு.
2) தொழில் முனைவோர்களின் தயக்கம்.
3) நிதி நிறுவனங்கள், தொழில்களுக்குப் பண வசதி செய்து தருவதில் இருந்த கட்டுப்பாடுகள்.
4) பொருளாதார மந்தநிலை.
5) தொழிலாளர்களிடையே நிலவிய அமைதியின்மை.
6) தமிழகத்துக்கு வேண்டிய நிலக்கரி, கட்டகரி (கோக்) இரும்பு மற்றும் எஃகு போன்றவை போதுமான அளவில் கிடைக்காதது ஆகியவை சில காரணங்களாகும்.

3. தொழில் துறையில் முன்னேற்றம் காணக் கீழ்க்கண்ட நடவடிக்கைகளை அகில இந்திய அண்ணா தி. மு. கழக அரசு எடுத்து வருகிறது:

1. 'டிட்கோவின்' மூலமாகக் கூட்டுத் துறையில் 12 தொழிற் சாலைகளும், பொதுத் துறையில் 2 தொழிற்சாலைகளும் நிறுவப் பட்டுள்ளன. மேலும் 10 தொழிற்சாலைகள் நிறுவ மத்திய அரசிடம் ஒப்புதல் பெற்றுக் கூட்டுத் துறையில் நிறுவ முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இவைகளின்றி 13 திட்டங்கள் பரிசீலனையில் உள்ளன. இவை அனைத்தும் கனரகத் தொழில்களும் நடுத்தரத் தொழில்களுமாகும்.

2. மேலும் 'சிப்காட்', 'டி. ஐ. ஐ. சி', 'சிட்கோ' போன்ற அரசு நிறுவனங்கள் தொழில் முனைவோர்களுக்கு நிதி வசதிகள், திட்ட அறிக்கைகள் தயாரித்தல், வட்டியில்லா விற்பனைக் கடன், தொழிற்பேட்டை ஆரம்பித்தல் போன்ற சலுகைகள் செய்து தருகின்றன. தமிழ் நாட்டில் சிறு தொழில்கள் முன்னேற்றத்திற்கு, அரசு மாவட்டந் தோறும் தொழில் மையங்கள் நிறுவி எல்லா வகை ஊக்கமும் ஆக்கமும் அளிக்கப்படுகின்றன. மேலே கண்டுள்ள செயல் திட்டங்கள் திட்டமிட்டவாறு முழுமையாக நிறைவேற்றப்பட்டால் தமிழ்நாடு தொழில் முன்னேற்றத்தில் உன்னத நிலை அடையும்.

**கேள்வி 2:** நாயுடம்மா தலைமையில் ஒரு குழு அமைத்து வேலை வாய்ப்பை அதிகரிப்பதற்கு

பற்றி ஓர் அறிக்கை அரசிடம் சமர்ப்பிக்கப்பட்டது. அது சம்பந்தமாக அரசு எடுத்திருக்கும் நடவடிக்கை என்ன?

பதில்: கிராமத் தொழில்கள், குறிப்பாகக் குடும்ப மற்றும் குடிசைத் தொழில்கள் மூலமாக வேலை வாய்ப்பை ஏற்படுத்தும் நோக்குடன் டாக்டர் நாயுடம்மா அவர்களைத் தலைவராகக் கொண்ட ஒரு வல்லுனர் ஆய்வுக் குழுவை அரசு 1978–ஆம் ஆண்டு பிப்ரவரி திங்களில் அமைத்தது. கிராமப் புறத்தில் விவசாயத் துறை, கால்நடை, வனத்துறைகளில் எளிதில் கிடைக்கும் விளைபொருள்களையும் கழிவுப் பொருட்களையும் பயன்படுத்திப் பெருவாரியாக வேலை வாய்ப்புத் திறன் கொண்ட 300–க்கும் மேற்பட்ட திட்டங்களை அந்தக் குழு பரிந்துரைத்துள்ளது. இந்தத் திட்டங்கள் ஒவ்வொன்றையும் செயல்படுத்தக் கூடிய சாத்தியக் கூறுகளை ஆராய்ந்து தனித்தனியாக உருவாக்கி அவைகளை பொது மக்களிடையே பரவலாக விநியோகிக்க நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது. அத்திட்டங்களைச் சிறு தொழில் முனைவோர்கள் அந்தந்தப் பகுதியின் சூழ்நிலைக்கேற்பத் தேர்ந்தெடுத்து செயலாக்க இயலும். தேவைக்கேற்பத் திட்டங்கள் அரசுத் துறையாலும், அரசு நிறுவனங்களாலும் நேரடியாகவே எடுத்துக் கொள்ளப்படும். பல்வேறு துறைகளும் இப்பணியில் முனைப்புடன் ஈடுபட்டுள்ளன. இந்தத் திட்டங்களைச் செயல்படுத்துவதைக் கண்காணிப்பதற்கு இந்தக் குழு கிராமத் தொழில் வளர்ச்சிக் கண்காணிப்புக் குழு என்ற பெயரில் அரசுக்குத் தொடர்ந்து உதவி அளித்து வரும். இக்குழுவிற்கு உதவி செய்ய ஒரு தனி அலுவலர் விரைவில் நியமிக்கப்படுவார்.

**கேள்வி 3:** அண்மையில் ராஜாஜி மண்டபத்தில் தமிழகத்தின் தலைசிறந்த தொழில் மேதைகளுடன் கலந்து உரையாடினீர்கள். அதன் விளைவால் உங்களுக்கேற்பட்ட எண்ணங்கள் என்ன? அந்தச் சந்திப்பால் விளைந்த நன்மைகளையும் தொழில் துறையில் நீங்கள் செய்யப் போகும் முன்னேற்றங்களும் என்னென்ன?

**கேள்வி 4:** தமிழகம் தொழில் துறையில் வளமான எ காலத்தை அடையத் தாங்கள் கூறும் வழி என்ன?

பதில்: ராஜாஜி மண்டபத்தில் 16.3.79 அன்று நடந்த கூட்டத்தில் தொழிலதிபர்கள் தொழில் முன்னேற்றத்தில் தற்போது இருந்து வரும் இடர்ப்பாடுகளையும், அவைகளை நீக்குவதற்கான யோசனைகளையும் எடுத்துக் கூறினர். அந்தக் கருத்துக்கள் தனியாக அரசின் பல்வேறு துறைகளின் பரிசீலனையில் இருக்கின்றன.

(1) தொழிலதிபர்கள் அவர்களிடம் உள்ள பணத்தை முதலீடு செய்து தொழில்களை ஆரம்பிக்க முன் வந்துள்ளனர். அவர்கள் போடும் முதலீட்டுக்குப் பாதுகாப்பளிக்கவும், தொழிலாளர்களிடையே அமைதி நிலவவும் அரசு ஆவன செய்யும் என்ற நம்பிக்கை தொழிலதிபர்களுக்கு ஏற்பட்டுள்ளது தொழில் வளர்ச்சிக்கு நல்ல அறிகுறி. தொழில்கள் புதிது புதிதாகத் தொடங்கப்பட்டால்தான் தொழில் செய்யும் திறனுள்ளவர்களுக்குத் தொழில் கிடைக்கும். எனவே தொழில் நிறுவனங்களுக்கு ஊறு விளைவிக்கலாகாது என்ற எண்ணம் தொழிலாளர்களுக்கு ஏற்பட்டிருப்பது தொழிலதிபர்களுக்கு மனநிறைவையும் ஆர்வத்தையும் ஏற்படுத்தியுள்ளது.

(2) தொழில்களில் அடிக்கடி வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டால் உற்பத்தி பாதிக்கப்படுகிறது என்பதையும் இதைத் தவிர்க்க வேண்டும் என்ற எண்ணமும் தொழிலாளர்கள் மத்தியில் பெரும்பாலும் ஏற்பட்டுள்ளது. எனவே ஒரு தொழிற்சாலையிலுள்ள அனைத்து சங்கங்களையும் சேர்ந்த அத்தனை தொழிலாளர்களையும் கூட்டி அவர்களில் 60 சதவிகிதத்தினராவது வேலைநிறுத்தம் செய்யலாம் என்று முடிவு எடுத்த பிறகுதான் வேலை நிறுத்தம் செய்யலாம். அதே போல்





நிர்வாகத்துடன் செய்யும் ஒப்பந்தங்களும் மேலே குறிப்பிட்ட 60 சதவிகிதத்தினர் ஏற்றுக் கொண்டால்தான் ஏற்றுக் கொள்ளப் படும். இப்படிப்பட்ட விதிகள் கொண்ட சட்டம் கொண்டு வர இந்த அரசு விரும்பு கிறது.

(3) தொழில்கள் ஆரம்பிக்க உரிமங்கள், அனுமதிகள், பதிவுச் சான்றிதழ்கள் போன்றவை பெறுவதில்ஏற்படும் காலதாமதத்தைத் தவிர்க்க, தலைமைச் செயலர் தலைமையில் ஒரு குழு அமைத்து வழி வகைகள் கண்டறியப் பட ஆவன விரைவாகச் செய்யப்படுகின்றன.

(4) புதிய தொழிற்சாலைகளை ஆரம்பிப்பவர்களுக்கு மூலப்பொருட்கள் கிடைக்க அரசு அனைத்து உதவிகளையும் செய்யும்.

தமிழகத்தின் தொழில் வளம் பெருகத் தொழில் அதிபர்கள் மற்றும் தொழிலாளர்கள் ஆகிய இருவரும் தங்களுடைய முழு ஒத்துழைப்பையும் நல்க வேண்டும். அதாவது தொழிலதிபர்கள், லாபத்தை மட்டுமே குறிக் கோளாகக் கொள்ளாமல் தமிழ் நாட்டில் தொழில் வளம் பெருக வேண்டும், மக்களுக்குத் தேவையான பொருட்களை நியாய விலையில் கிடைக்கச் செய்ய வேண்டும், ஏற்றுமதி செய்யும் தகுதி வாய்ந்த வற்றையும் உற்பத்தியையும் பெருக்க வேண்டும் என்ற மனப்பான்மையைக் கொள்ள வேண்டும். அதேபோல் தொழிலாளர்கள் தங்களுக்கு இலாபத்தில் பங்கு, ஊதிய உயர்வு மற்றச் சலுகைகள் பெற வேண்டும் என்பதை மட்டுமே குறிக்கோளாகக் கொள்ளாமல் தொழிற்சாலை அமைதியான முறையில் இயங்கவும் அடுத்த தலைமுறையினருக்கும் வாழ்வளிக்க உதவ வேண்டிய தொழிலாகும் என்ற நன்நோக்கத்தோடு அவர்கள் தொழிலதிபர்களுக்கும், அரசுக்கும் உறுதுணையாக இருக்க வேண்டும்.

**கேள்வி 5: கல்வித் துறையின் வளர்ச்சியும் சீரமைப்பும் எந்த அளவுக்கு அமைந்துள்ளது? அது மேலும் சிறப்பாக இருக்க என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?**

கல்வித் துறையின் வளர்ச்சி கடந்த இரண்டு ஆண்டுகளாகக் கணிசமான அளவுக்கு உயர்ந்துள்ளது. கல்விக்கான நிதி ஒதுக்கீடும் அதிகரிக்கப் பட்டுள்ளது. கல்வியின் தரமும் உயர்ந்துள்ளது. பள்ளிக்கல்வி, உயர்நிலைக் கல்வி, தொழிற்கல்வி கல்லூரிக் கல்வி ஆகிய துறைகளில் யாவரும் பாராட்டுகின்ற முறையில் தமிழகம் முன்னேறி வந்திருக்கிறது. அறிஞர் அண்ணா அவர்களின் பேரில் தொழில் பல்கலைக்கழகம் ஒன்றும் சென்னையில் நிறுவப்பட்டுள்ளது. திருச்சிராப்பள்ளியிலும் கோயமுத்தூரிலும் இரண்டு பல்கலைக் கழகங்களை நிறுவ இவ்வரசு முனைப்பாக நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது. இந்த அரசு பொறுப்பேற்ற பின்னர் கல்லூரிக் கல்விக்குச் செலவிடப்படும் தொகை இருமடங்காகி உள்ளது. கல்லூரி கல்விக்குச்செலவான தொகை 75—76ல் ரூ 10 கோடி 76—77ல் ரூ. 12 கோடி, 77—78ல் ரூ. 19 கோடி, 78—79—ல் ரூ. 24 கோடி. பல்கலைக் கழக மானியக் குழுவின் பரிந்துரையின்படி கல்லூரி ஆசிரியர்களின் சம்பள விகிதங்கள் உயர்த்தப்பட்டுள்ளது. கல்லூரி ஆசிரியர்களுக்குப் பணி பாதுகாப்பு வழங்கப் படுகிறது.

தமிழ்நாட்டில் தற்போது 36,000 பள்ளிகள் உள்ளன. ஆசிரியர்களின் எண்ணிக்கை 2.5 இலட்சமாகும். மாணவர்களின் எண்ணிக்கை 85 இலட்சமாகும். இந்த அரசு பதவியேற்ற பின்னர் ஆசிரியர்களின் பதவிகள் அதிகரிக்கப்பட்டுள்ளன. பள்ளிகளில் அறிவியல் கல்விபோதனைக்காக அறிவியல் ஆய்வுக் கூடமானியங்கள் வழங்கப்படுகின்றன. நிரந்தர கட்டிடங்கள் இல்லாத பள்ளிகளுக்குக் கட்டிடங்கள் கட்டவும், இதர பள்ளிகளில் வசதிகளைப் பெருக்கவும் திட்டங்கள் தீட்டப்பட்டுள்ளது. கிராமங்களில் உள்ள முறையாகப் பள்ளிக்குச் சென்று படிக்காத இளைஞர்கள் நன்மைக்காக இ.எஸ்.எல்.சி. தேர்வு மீண்டும் நடத்தப்பட இருக்கிறது. பள்ளிப் பாடப் புத்தகங்கள் தடங்கல் இல்லாமல் உரிய காலத்தில் கடந்த ஈராண்டு



மேலட்டை - வண்ணப்படம் எடுத்தவர்:
'சலன்'

களில் மாணவர்களுக்குக் கிடைக்கிறது. பட்டதாரி ஆசிரியர்கள் முன்னால் இருந்த அரசினரால் கொடுமையாக நடத்தப்பட்டு அரசிடம் மன்னிப்புக் கேட்கின்ற அவல நிலை மாறி இப்பொழுது பி. டி. ஆசிரியர்கள் பல்வேறு நன்மைகளைப் பெற்று வருகின்றனர். தமிழ் ஆசிரியர்களுக்குத் தக்க உரிமையும் இடமும் வழங்கப்படுகிறது.

ரூபாய் 10 லட்சம் செலவில் சென்னையில் ஆசிரியர் இல்லம் கட்ட அனுமதி தரப்பட்டுள்ளது. மேல் நிலைப்பள்ளிகளுக்கான பல்வேறு வசதிகளை அரசு இப்பொழுது செய்கிறது. இத்தகைய வசதிகளாலும் ஆசிரியர்களுக்கு வழங்கப்படுகின்ற உதவிகளாலும் கல்வித் தரமும் பள்ளி செல்வோர் எண்ணிக்கையும் உயர்ந்து வருகிறது. இந்த அரசுக்கு மாணவர்களின் முன்னேற்றமும் ஆசிரியர்களின் நலனும் சமுதாயத்தின் நிலையும் உயர வேண்டும், பெருக வேண்டும் என்ற உணர்வும், எண்ணமும் பெரிதும் உள்ளது.

கேள்வி 6: கலைத்துறை இன்று முன்பு இருந்ததை விட முன்னேறி இருக்கிறதா?

கலைத்துறை சமுதாயத்துடன் இணைந்துள்ளதாகும். சமுதாய மறுமலர்ச்சிக்கு உறுதுணையாக உள்ளது கலைத்துறை. கலைப் பணிகளில் இந்த அரசு முன்னைவிட அதிகமாக முன்னேறி வந்திருக்கிறது என்றால் அது மிகையாகாது. வரலாற்றுச் சின்னங்களைப் பாதுகாப்பதிலும், சிதறிக் கிடக்கும் சிற்பங்களைப் பேணிப் பாதுகாப்பதிலும் இந்த அரசு தக்க நடவடிக்கை எடுத்து வருகிறது. தர்மபுரியில் ஒரு நிலையான அருங்காட்சியகம் ஏற்படுத்தப் படவிருக்கிறது. ஓலைச் சுவடிகளையும், உதிரி சிற்பங்களையும் சேகரிக்கும் திட்டம் ஐந்து மாவட்டங்களுக்கு விஸ்தரிக்கப்பட்டுள்ளது. மாவட்டங்கள் தோறும் அருங்காட்சியகம் நிறுவ எண்ணியுள்ளோம். 1979 ஜனவரியில் மதுரையில் ஓர் இசைக் கல்லூரி தொடங்கப்பட்டது. இவ்வாண்டு திருவள்ளுவர் நாளன்று அரசவைக் கவிஞர் விருது எட்டு சிறந்த கலைஞர்களுக்கு வழங்கப்பட்டது.

வறுமையால் வாடும் கலைஞர்களுக்கு ஓய்வூதியம் வழங்குவதற்கான திட்டத்தின் கீழ் ஆண்டுதோறும் மேலும் மேலும் கலைஞர்களுக்கு ஓய்வூதியம் தரப்பட்டு வருகிறது. 1977–78ல் 75 கலைஞர்களுக்கும், 1978–79இல் 101 கலைஞர்களுக்கும், 1979–80ல் 175 கலைஞர்களுக்கும் ஓய்வூதியம் அளிக்கப்படுவதிலிருந்து இவ்வரசு ஆட்சிக்கு வந்ததிலிருந்து கலைஞர்களுக்கு வாழ்வளிக்க எடுத்துக் கொண்ட சிறப்பு நடவடிக்கை வெளிப்படும். மேலும் இவ்வாண்டு திரு குளிக்கரை பிச்சையப்பா அவர்கள் மருத்துவச் செலவிற்காக முதல்வர் நிதியிலிருந்து ரூ 10,000 அரசு அளித்தது.

திரைப்படங்கள் கலை உலகுக்கு அரும்பணி புரிகின்றன. சிறந்த திரைப்படத் தயாரிப்பாளர்களையும், கலைஞர்களையும் ஊக்குவிக்கும் திட்டம் இந்த அரசினரால் செயல்படுத்தப் பட்டு வருகிறது. ஒவ்வொரு ஆண்டும் ஐந்து படங்களுக்கு ஒவ்வொரு லட்ச ரூபாய் வீதம் அரசு உதவித் தொகை வழங்குகிறது. உயர்ந்த கலை உணர்வு தொழில் நுணுக்கம் அமைந்த படங்களைத் தயாரிப்பவர்களை ஊக்குவித்துப் பரிசுகள் வழங்கும் திட்டம் மீண்டும் 78–79ம் ஆண்டிலிருந்து செயல் படுத்தப் படுகிறது. திரைப்படத் தொழிலும் அதனை நம்பி வாழும் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்களும் நலம் பெறும் வகையில் கேளிக்கை வரி வசூல் முறை விஞ்ஞான ரீதியில் சீராக்கப்பட்டுள்ளது.

(அடுத்த வாரம்: தொழிற்சங்கங்களில் அரசியல் பாதிப்பு, சுற்றுலா துறை, விவசாயிகள் போராட்டம், மின் உற்பத்தி, அமைச்சரவையில் ஒற்றுமை முதலிய பல அம்சங்களை விவாதிக்கிறார், முதலமைச்சர்.)



புகைப்படங்கள்:
ஏ. சுந்தரம்

# தஞ்சை



தேர்தலுக்கு இன்னும் இரண்டே வாரங்கள் உள்ள கால கட்டம். தேர்தல் நிலவரம் எப்படி இருக்கிறது என்று அறியலாம் எனத் தஞ்சையில் பிரவேசிக்கிறேன்.

இந்திரா காந்தி தேர்தலில் போட்டியிடவில்லை என்பதால் உண்டான ஏமாற்றமும், 'எம். ஜி. ஆர். கடைசி நிமிஷத்தில் காலை வாரி விட்டார்' என்று எம். ஜி. ஆர். மீது இ. காங்கிரஸ் தொண்டர்கள் கொண்டிருந்த வெறுப்பும் பெரும்பாலும் மறைந்து விட்டிருக்கிறது. ஆனாலும் இ. காங்கிரஸ் தலைவர்களான மூப்பனார், துளசி ஐயா வாண்டையார், ஆர். வி. சுவாமிநாதன் போன்றவர்களிடம் இன்னும் மனத்தாங்கல் உள்ளதை, சூழ்நிலை வெளிப்படுத்துகிறது.

இ. காங்கிரஸ் வேட்பாளர் திரு சிங்கார வடிவேலு வேட்பு மனு தாக்கல் செய்ததும் திரு எம். ஜி. ஆரை நாடி ஒத்துழைப்பைக் கேட்டு விட்டதோடு அ. தி. மு. க. தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் கலந்து கொள்கிறார்.

பல இடங்களிலும் ''உங்கள் வேட்பாளர் திருமதி இந்திரா காந்தி'' என்பதை அழித்து ''சிங்கார வடிவேலு'' என்று மாற்றப்பட்டிருப்பது புலனாகிறது. ராஜவீதியில் இ. காங்கிரஸ் தலைமைத் தேர்தல் அலுவலகத்திற்குப் பக்கத்தில் சுவரில் மிகப் பெரிதாக இந்திராவுக்கு ஓட்டளிக்கக் கோரி எழுதப்பட்ட சுவர் பிரசாரம் இன்னும் அப்படியே உள்ளது. அதே மாதிரி ஐயம்பேட்டையில் ஒரு பிரம்மாண்ட சுவர்ப் பிரசாரம் காணப்படுகிறது. இந்திரா காந்தி நிற்பார் என்கிற நினைப்பில் செய்யப்பட்ட ஒரு மாபெரும் கட்அவுட், அவர் நிற்காத நிலையில் எவ்விதத் தேர்தல் வாசகமும் இன்றித் திருவையாற்றில் வைக்கப்பட்டுள்ளது.

இ. காங்கிரஸ் தங்களை லட்சியம் செய்கிறதா இல்லையா என்பதைப்பற்றி சற்றேனும் கவலைப் படாமல் அ. தி. மு. க. தொண்டர்களும், அமைச்சர்கள் உட்பட மற்ற தலைவர்களும் முழு அளவில் சிங்கார வடிவேலுவை ஆதரித்துப் பிரசாரத்தில் இறங்கி விட்டிருந்தனர். காங்கிரஸ் வெற்றி பெற வேண்டும் என்கிற எண்ணத்தைவிட, தி. மு. க. வேட்பாளர் அன்பில் தர்மலிங்கம் தோற்க வேண்டும் என்பது அ. தி. மு. க. வின் குறிக்கோளாக உள்ளது.

தஞ்சைக்கு வந்து ஒரு வாரம் தங்கித் தேர்தல் களத்தைச் சூடு பிடிக்கச் செய்த பெருமை தி.மு.க. தலைவர் கருணாநிதியைச் சார்கிறது. அவர் பிரசாரம் செய்ய ஆரம்பித்த பிறகு தான் இரு தரப்பிலும் ஏகப்பட்ட பரபரப்பாம். கூட்டணி என்பது தெரியாமல் தி. மு. க., வலது கம்யூனிஸ்டு, இடது கம்யூனிஸ்டு, ஜனதா, முஸ்லீம் லீக், வீரமணி திராவிடக் கழகம் ஆகியவை ஒருங்கிணைந்து ஒரு கட்சி போலவே செயல்படுகின்றன. இக்கூட்டணியின் உற்சாகமும், உழைப்பும் அபார வைக்கின்றன.



திரு சந்திரசேகரன்

எங்கு பார்த்தாலும் தோரணங்கள், கொடிகள், சுவரொட்டிகள், சுவரிலேயே வர்ணங்களில் எழுதப்பட்ட பிரம்மாண்டமான பிரசாரங்கள், சைக்கிள் ரிக்ஷா, டாக்சிகள், கார்கள் ஆகியவற்றில் கூட்டணிக் கொடிகள் ஆகியவை 'மறுநாளே தேர்தலோ' என்கிற எண்ணத்தை உண்டாகச் செய்கின்றன. இந்த அளவுக்கு இல்லா விட்டாலும் கூடத் தஞ்சையைச் சேர்ந்த திருவையாறு, பாபநாசம், வலங்கைமான் தொகுதிகளிலும் தேர்தல் சூடு பிடித்து விட்டிருந்தது.

தேர்தல் எந்தக் கட்சிக்குச் சாதகமாகப் போகும், இந்திரா காந்தி தேர்தலில் நின்றிருந்தால் என்ன நிலை உருவாகி இருக்கும் என்ப

திரு அன்பில் தர்மலிங்கம்



திரு சிங்கார வடிவேலு



# தேர்தல் களத்தில்...

தைக் கணிக்கச் சில பொது மக்களைச் சந்தித்து அபிப்பிராயம் கேட்டேன்.

பி. யூ. சி. முடித்து விட்டு வேலைக்காக அலைந்து கொண்டிருக்கும் இளைஞர் திரு ஆர். ரவிச்சந்திரன் சொன்னது:

''இந்திரா காந்தி தேர்தலில் நின்றிருந்தால் அவர் வெற்றி பெற்றிருப்பார் என்பது உறுதியான விஷயம். அவரை எதிர்த்து யார் நின்றிருந்தாலும் இந்திராவே வென்றிருப்பார். ஆனால் வன்முறை இத்தொகுதியில் தலை விரித்தாடி இருக்கும். பல கொலைகள் நிகழ்ந்திருக்கக் கூடும். அவர் நிற்காததால் இவை தவிர்க்கப்பட்டுள்ளன.



திருவையாற்றில் இந்திரா 'கை' அசைவு

அன்பில் தர்மலிங்கம் பற்றி மக்களிடையே நல்ல அபிப்பிராயம் கிடையாது. மாறாகத் திரு சிங்கார வடிவேலு Non controversial candidate. ஆனால் இ. காங்கிரஸ் தலைவர்களுக்கும், அ.தி.மு.க. தலைவர்களுக்கும் இடையே இன்னும் சரியான இணைப்பு ஏற்படவில்லை. மாறாக தி. மு. க. கூட்டணியினர் பிரமாதமாகச் செயல்படுகின்றனர். இதே நிலை நீடித்தால் தி. மு. க. வெற்றி உறுதி. நிலைமை மாறி இ. காங்கிரஸ், அண்ணா தி. மு. க. ஒரு மனதாக இணைந்து செயல்படுமானால் இரு கட்சிக்கும் சம வாய்ப்பு உண்டாக நிச்சயம் சாத்தியம் உள்ளது.''

திரு ரவிச்சந்திரன்

டாக்ஸி டிரைவர் திரு எஸ். எம். சந்திரசேகரன் சொன்னது:

தஞ்சை தி. மு. க. வின் கோட்டை. இதில் இ. காங்கிரஸ் வேட்பாளர் வெற்றி பெறுவார் என்று நினைப்பது வெறும் மனக்கோட்டைதான். தொண்டர் மட்டத்தில் தி. மு. க. கூட்டணியினர் மிகச் சிறப்பாகச் செயல்படத் தொடங்கி விட்டனர். இந்நிலையில் அன்பில் ஒரு லட்சம் ஓட்டு வித்தியாசத்தில் வெற்று பெறுவது உறுதி.

இந்திரா காந்தி தேர்தலில் நின்றிருந்தால் தி. மு. க. சார்பில் திருமதி ராணி அண்ணாதுரை அவர்களைத் தேர்தலில் நிற்கவைக்கத் தி.மு.க. மேலிடம் மனத்தில் கொண்டிருந்ததாக அறிகிறோம். எம். ஜி. ஆரால் ராணி அம்மையாரை எதிர்த்து எவ்விதம் பிரசாரம் செய்திருக்க முடியும்? நிச்சயம் இந்திரா காந்தி தோற்றிருப்பார்!

மாணங்கோரை கிராமத்தில் மிராசுதாராக உள்ள திரு ஆர். கோவிந்தராஜுலு நாயுடு அவர்களைச் சந்தித்துக் கேட்டபோது அவர் சொன்னது:

''தி.மு.க ஆட்சியைப் பற்றியும், அன்பில் தர்மலிங்கம் எப்படிப்பட்டவர், பொது இடங்களில் எப்படியெல்லாம் நடந்துகொண்டவர் என்பது எல்லோருக்கும் தெரிந்த உண்மை. இந்நிலையில் மக்கள் மறுபடியும் அவருக்கு எப்படி ஓட்டுப் போடுவார்கள்? தஞ்சையிலுள்ள விவசாயக் குடிமக்கள் அ.தி.மு.க.வின் மேலுள்ள வெறுப்பால் தி.மு.க.வுக்கு ஓட்டளிப்பார்கள் என்று பிரசாரப்படுத்தப்படுகிறது. தஞ்சையைப் பொறுத்த மட்டில் எவ்வித விவசாயக் கிளர்ச்சியும் கிடையாது. எங்கள் கிராமத்து விவசாயிகள் அனைவரும் இ. காங்கிரஸ் வேட்பாளர் திரு. சிங்கார வடிவேலுவுக்குத்தான் ஓட்டளிக்க உள்ளனர். வேட்பாளருடைய தகுதி என்று பார்த்தாலும் அவர் சிறந்த பாரம்பரியமுள்ள குடும்பத்தவர். தஞ்சை மாவட்டக்காரர். சட்ட நிபுணர். அவர் வெற்றி பெறுவது உறுதி.''

கோவிந்தராஜுலு நாயுடு

மூடப்பட்டிருக்கும் தஞ்சாவூர் டெக்ஸ்டைல் மில்லில் வேலை பார்க்கும் திரு எஸ். சதா சொன்னது:

''மில் தொழிலாளர் பிரச்னையில் திரு கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது தானே முன்னின்று எங்கள் சார்பில் வாதாடிப் பலவித நன்மைகளைப் பெற எங்களுக்கு வழி செய்தார். ஆனால் எம். ஜி. ஆர். திரு ராகவானந்தத்தை அனுப்பி விட்டு எவ்வித அக்கறையும் காட்டாமல் விட்டு விட்டதால் சமரசம் ஏற்படாமல் துணி ஆலைகள் இன்று மூடப்பட்டு உள்ளன.



திரு எஸ். சதா

விவசாயிகள் போராட்டம், ஆசிரியர்கள் போராட்டம், மில் தொழிலாளர்கள் பிரச்னை



அங்கம்மாள்

போன்ற தொழிலாளர் பிரச்னைகளை அவர் அக்கறையுடன் தீர்க்க முன்வருவதில்லை.

தெருக்கள் சரியாக இல்லாத நிலையில் தேர்தலை மனத்தில் கொண்டு திடீரென்று ஐந்து புது பஸ் ரூட்டுகளைக் கிராமங்களுக்கு விட ஏற்பாடு செய்து விழாக் கொண்டாடினர். ஒரு ரூட்டில் பஸ் கவிழ்ந்து 45 பேர்களுக்குப் பலத்த காயம். தேர்தலுக்குப் பிறகு இந்த ரூட்கள் தொடருமா என்பதும் கேள்வி.

மக்கள் அ. தி. மு. க. அரசைப் பற்றி நன்றாகப் புரிந்துகொண்டுவிட்டனர். இந்நிலையில் அ.தி.மு.க. ஆதரவு அளிக்கும் கட்சிக்கு எப்படி ஓட்டு வரும்? அன்பில் தர்மலிங்கம் ஒரு லட்சம் வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெறுவது உறுதி!''

அண்ணாசிலை எதிரில் உள்ள கந்தசாமி முதலியார் ஜவுளி வியாபார உரிமையாளர் திருமதி அங்கம்மாள் சொன்னது:

''இந்திரா அம்மா எலெக்ஷனுக்கு நின்னிருந்தா அவுங்களுக்குத்தான் வோட்டு போட்டிருப்பேன். இப்போ யாரோ சிங்கார வடிவேலுன்னு நிக்கிறாராம். அவர் யாருன்னே தெரியாது. அன்பில் தர்மலிங்கம் ரொம்பவும் எல்லாருக்கும் தெரியும். நான் உதய சூரியனுக்குத் தான் ஓட்டுப் போடுவேன். என் கடைலே கட்சிக் கொடிகள் வியாபாரம் பண்ணறேன். அதிகமா விக்கறது என்னமோ அண்ணா தி. மு. க. கொடிதான்!''

தஞ்சையைச் சேர்ந்த திருவையாறு தொகுதியில் ஜோதிடராக இருக்கும் திரு வெங்காச்சி அய்யர் அவர்களைக் கேட்டபோது அவர் சொன்னது:

''நான் பழைய காங்கிரஸ் காரன். 1957 வரை காங்கிரஸுக்காகத் தேர்தல்களில் முழு மூச்சாக வேலை செய்தவன். ராஜாஜி சுதந்திரக் கட்சி ஆரம்பித்த பிறகு அதில் சேர்ந்தேன். தற்போது நான் ஜனதா ஆதரவாளன். தனது சொந்த நலனுக்காகக் கட்சியை உடைத்துக்கொண்டே போகிறவர் இந்திரா. என்னோட்டு நிச்சயம் இ. காங்கிரஸுக்குக் கிடையாது. ஜனதா ஆதரிக்கும் தி.மு.க. வுக்குத்தான். தஞ்சை தி. மு. க. வின் கோட்டை. இங்கு தி. மு. கவைத் தவிர வேறு கட்சி நிச்சயம் வெற்றி பெற முடியாது. இந்திராவே நின்றிருந்தாலும் தி. மு. க. தான் வெற்றி பெற்றிருக்கும்.



வெங்காச்சி ஐயர்

தஞ்சையை விட்டுப் புறப்படுமுன் தி. மு. க வேட்பாளர் அன்பில் தர்மலிங்கத்தையும், இ. காங்கிரஸ் வேட்பாளர் சிங்கார வடிவேலுவையும் சந்தித்தேன்.

அன்பிலிடம் சில கேள்விகள் கேட்டேன்.

தி. மு. க. கூட்டணிக்கும் இ. காங்கிரஸ் கூட்டணிக்கும் உள்ள மாறுபாடுகளாக எவற்றைக் கருதுகிறீர்கள்?

''தி. மு. க. கூட்டணி ஒரே கட்சி போலவே இணைந்து சிறப்பாகச் செயல்படுகிறது. அண்ணா தி. மு. க. இ. காங்கிரஸ் இடையே இந்திரா விவகாரம் காரணமாகத் தோன்றிய மனக் கசப்பு சரியாக வில்லை. மேலும் எண்ணிக்கையைக் கூட்டிக் காட்ட வேண்டும் என்பதற்காகத் தங்கள் கொடிகளுடன் தொண்டர்களே இல்லாத திராவிடக் கழகம், முஸ்லீம் லீக் கொடிகளையும் சேர்த்துப் பறக்க விடுகின்றனர். தி. மு. க. கூட்டணி உணர்வு பூர்வமாகச் செயல்படுகிறது.

இன்னும் எம். ஜி. ஆர். தேர்தலில் பிரசாரம் செய்ய ஆரம்பிக்கவில்லை. அவர் பிரசாரம் செய்ய ஆரம்பித்தால் தி. மு. க. ஆட்டம் கண்டு விடும் என்று பேசப் படுகிறதே?

''தி. மு. க. வுக்கு வரக்கூடிய ஓட்டுகள் ஏற்கெனவே மனத்தளவில் முடிவானவை. எந்தத் தலைவர் பிரசாரத்தாலும் அவற்றை மாற்றிவிட முடியாது. எவர் பிரசாரம் செய்தாலும் ஒரு லட்சம் ஓட்டு வித்தியாசத்தில் தி. மு. க. வெற்றி பெறுவது உறுதி.''

பாராளுமன்றம் இன்னும் இரண்டரை வருடங்கள் தான். நான் அங்கு போய் ஒன்றும் பிரமாதமாகச் சாதித்துவிடப் போவதில்லை. வன்முறையைத் தவிர்க்கவே தேர்தலில் நிற்கிறேன் — என்று தாங்கள் பேசினதாகப் பத்திரிகைகள் வெளியிட்டனவே, உண்மைதானா?

''நான் பேசினதில் ஒரு பகுதியை மட்டும் வெளியிட்டுத் தவறான அபிப்பிராயத்தைப் பத்திரிகைகள் உண்டாக்குகின்றன. இடைத் தேர்தல் என்பது ஆளும் கட்சியின் செயல் திறமைக்கு ஓர் உரைகல். விவசாயிகள் கிளர்ச்சி, ஆசிரியர்கள் கிளர்ச்சி, பல தொழிலாளர் பிரச்னைகள் ஆகியவற்றில் அ. தி. மு. க. எப்படி நடந்து கொண்டுள்ளது என்பது உலகறியும். அவர்கள் நடந்து கொண்டது சரிதான் என்று பட்டால் அவர்களுக்கே வாக்களியுங்கள். தவறு என்று தோன்றினால் எனக்கு வாக்களியுங்கள். பாராளுமன்றம் போய் இரண்டரை ஆண்டுகளில் நான் பெரிதாகச் சாதிப்பேன் என்பதை விட அ. தி. மு. க. அரசின் மீது உள்ள அதிருப்தியை வெளிப்படுத்த இந்த இடைத் தேர்தல் அதிகமாக உதவும் என்று பொருள்பட நான் பேசினேன்.''

இந்திரா காந்தி தேர்தலில் நின்றிருந்து தாங்கள் எதிராக நிற்கும் சூழ்நிலை இருந்தால் தங்களால் வெற்றி பெற்றிருக்க முடியும் என்று நம்புகிறீர்களா?

''நிச்சயமாக! இப்போது இருப்பதைவிட அதிக வாய்ப்பு உண்டு. நானும், சிங்கார வடிவேலும் உறவினர்கள். இந்திரா காந்தி நின்றிருந்தால் அவர் அந்நிய மாநிலத்துக்காரர். அவருடைய முன்னாளைய செய்கைகளே எனக்கு அதிக வோட்டுக்களைப் பெற்றுக் கொடுத்திருக்கும்.''

இ. காங்கிரஸ் வேட்பாளர் திரு சிங்காரவடிவேலுவைச் சந்தித்தேன்.

''கூட்டணி என்றில்லாவிட்டாலும்கூட இ. காங்கிரஸும், அ. தி. மு. க.வும் தொண்டர்கள் நிலையில்



மிகச் சிறப்பாக இணைந்து செயல்படுகின்றனை. தலைமை அளவிலும் இரு கட்சிகளும் ஒன்றாக இணைந்து பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டோம். எதிர்க் கூட்டணியில் கி. வீரமணி தலைமையில் உள்ள திராவிடக் கழகத்தைவிட எங்களை ஆதரிக்கும் திரு திருவாரூர் தங்கராசு தலைமையிலுள்ள திராவிடக் கழகத்தில் தொண்டர்கள் அதிகம். தஞ்சை நாடாளுமன்றத் தொகுதியைப் பொறுத்த மட்டில் வலது கம்யூனிஸ்டுக்குத் தொண்டர்கள் மிகமிகக் குறைவு. சென்ற பொதுத் தேர்தலைவிட தி. மு. க. வுக்கு மக்கள் ஆதரவு குறைந்து அ. தி. மு. கவுக்கு ஆதரவு கூடி உள்ளது. இந்நிலையில் இ. காங்கிரஸ் ஒரு லட்சம் ஓட்டு வித்தியாசத்தில் நிச்சயம் வெற்றி பெறும்.

''சூழ்நிலை காரணமாகத்தான் இந்திரா காந்தி தேர்தலில் நிற்கவில்லை. அவர் நின்றிருந்தால் எவர் எதிர்த்து நின்றிருந்தாலும் எதிராளிக்கு டெபாசிட் போயிருக்கும் என்பது உறுதி.

''காங்கிரஸ் தலைவர்களிடையே இருந்த வேற்றுமை மறைந்து தற்போது ஒருங்கிணைந்து செயல்படுகின்றனர். இந்நிலையில் எங்கள் வெற்றி ஒரு முடிவான விஷயம்!'' என்றார் சிங்கார வடிவேலு.

'ஒரு லட்சம்' என்பதை இரு கட்சியினருமே ஒரு தாரக மந்திரம் போல் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்!

## நாகப்பட்டினம்

'நாளை நமதே!
நாகையும் நமதே!!' என்ற அ. இ. அ. தி. மு. க. கவர்ப் பிரசாரத்துடன் நாகையின் ஒரு பகுதியான மன்னார்குடி வரவேற்றது.

'மறுநாள் தேர்தலோ' என்று தஞ்சையைக் கண்டால் தோன்றினதுக்கு மாறாக இன்னும் சில மாதங்கள் கழித்துத்தான் தேர்தலோ என்று நாகைத் தொகுதியைக் கண்டால் எண்ணத் தோன்றுகிறது.

மன்னார்குடி, திருவாரூர் ஆகிய இடங்களில் ஓரளவுக்குக் கொடிகளும், பிரசார விளம்பரங்களும் காணப்படுகின்றனை. நாகப்பட்டினத்தில் எவ்வித ஆரவாரமும் இல்லவே இல்லை.

வலது கம்யூனிஸ்டு வேட்பாளர் திரு கே. முருகையன் நன்கு பரிச்சயம் ஆனவர். மாறாக அ. இ. அ தி. மு. க. வேட்பாளர் திரு எம். மகாலிங்கம் பற்றிப் பலருக்கும் தெரிந்திருக்கவில்லை. விழும் ஓட்டுகள் கட்சி அடிப்படையில்தான் இருக்க முடியும்.

இரு கட்சி வேட்பாளர்களும் ஓட்டு கேட்கக் கிராமங்கிராமமாகச் சென்றிருந்ததால் அவர்களைச் சந்திக்க இயலவில்லை.

நாகப் பட்டினத்தில் மளிகை வியாபாரம் செய்யும் திரு டி. தியாகராஜன் சொன்னது:

''போன எலெக்‌ஷன்லே தி. மு. க. சார்பிலே போட்டியிட்ட தாழை மு. கருணாநிதி 10000 வாக்கு வித்தியாசத்தில்தான் மறைந்த முன்னாள் எம். பி. திரு முருகையனிடம் தோற்றார். தற்போது இவர் வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர் திரு முருகையன் பக்கம் இருக்கிறார். அதோடு அ. தி. மு. க. அரசு புயல் வந்த சமயத்திலும், பல தொழிலாளர் பிரச்னைகளிலும் நடந்து கொண்ட விதம் மக்களிடையே அதிருப்தியை அதிகமான அளவு தோற்றுவித்துள்ளது. இந்நிலையில் வலது கம்யூனிஸ்ட் வேட்பாளர் பெருத்த வித்தியாசத்தில் வெற்றி பெறுவது உறுதி.''



''ஜிம்மி கார்ட்டர், பிரஷ்னேவ், இடி அமீன், சஞ்சீவரெட்டி ஆகியோரிடமிருந்து சிபாரிசுக் கடிதம் வாங்கிட்டு வந்துட்டேன், இப்பவாவது என் மகனுக்கு ஸீட் தருவீர்களா?''

நாகப்பட்டினத்திலுள்ள அ இ. அ. தி. மு. க. அலுவலகம் வெறிச்சோடிக் கிடந்தது ஓரிருவர் மட்டுமே இருந்தனர். அங்கிருந்த பத்தாவது வட்ட அ. தி. மு. க. செயலாளர் திரு ராஜேஸ்வரனைச் சந்தித்து, ''தஞ்சையில் இ. காங்கிரஸ் வேட்பாளருக்கு அ. தி. மு. க. பாடுபடும் அளவுக்குக் கூட நாகை அ. தி. மு. க வேட்பாளர் மகாலிங்கத்துக்கு நீங்கள் பாடுபடக் காணுேமே?'' என்று கேட்டதற்கு அவர் பதில் அளித்தது:

''நாங்கள் வெற்றி பெறுவது உறுதி என்ற நிலையில் எதிர்க் கட்சியினர் சுறுசுறுப்பாகப் பிரசாரம் செய்யாதபோது எங்களுடைய பிரசாரமும் சற்று அடக்கமாக உள்ளது என்று ஒப்புக்கொள்கிறேன். ஆனாலும் வேட்பாளர்களும் கட்சித் தொண்டர்களும் வீடு வீடாகச் சென்று ஒவ்வொரு கிராமத்திலும் பிரசாரம் செய்த வண்ணம்தான் இருக்கிறோம். விரைவில் முதலமைச்சரும் மற்ற அமைச்சர்களும் தீவிரப் பிரசாரத்தில் இறங்க உள்ளனர். மொத்த வாக்கில் 75 சதவீதம் வோட்டுப் போடப்படுமானால் எங்களுக்கு நிச்சயம் 50000 ஓட்டு வித்தியாசத்தில் வெற்றி உறுதி'' என்றார்.

மொத்தத்தில், கொள்கை அளவில் அடிப்படை மாறுபாடுகள் கொண்ட கட்சிகள் தேர்தலை முன்னிட்டுத் தற்காலிகமாக ஒருங்கிணைந்து செயல் படுவதைக் காண வேடிக்கையாகவும் வியப்பாகவும் இருக்கிறது!

- ரங்கா

புகைப்படங்கள்: மன்னை மூர்த்தி




இந்தியாவின் இரண்டாவது செயற்கை கோள் 'பாஸ்கரா' விண் வெளியில் செலுத்தப்பட்டிருக்கிறது.




இந்திரா காங்கிரஸ் உப்பு சத்தியாக்கிரகம் நடத்தத் திட்டமிட்டிருக்கிறது.



# கல்கி



1979 ஜூன் 17
சித்தார்த்தி ஆனி 3
மலர்: 37 இதழ்: 46



[illegible] - மக்கள் தாயென்று கும்பிட்ட [illegible] - பாரதியார்


# ஆபத்து விலகட்டும்; நற்பணி தொடரட்டும்!

தமிழகத்தின் முன்னேற்றத்தில் ஒரு மைல் கல் (அல்லது கிலோ மீட்டர் கல்!) என்று கருதப்படுவது கலைக்களஞ்சியம், குழந்தைகள் கலைக்களஞ்சியம் ஆகியவற்றின் பிரசுரம். இந்தப் பணி இத்துடன் முடிந்து போகிற ஒன்றல்ல. தொடர்கின்ற விஷயம். முதல் பதிப்பு, இரண்டாம் பதிப்பு என்று அதையே வெளியிட்டுக் கொண்டு போனாலும் போதாது. விஞ்ஞானத்தில் மட்டுமின்றி வேறு பல துறைகளிலும் புதிய ஆராய்ச்சிகளின் விளைவாகப் பழைய கருத்துக்களை மாற்றிக் கொள்ள வேண்டியதாயுள்ளது. அத்துடன் முற்றிலும் புதிய கண்டுபிடிப்புக்களும் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. எனவே 'என்ஸைக்ளோபீடியா' அல்லது கலைக் களஞ்சியத்தின் ஒவ்வொரு பதிப்பும் திருத்தப்பட்ட பதிப்பாக மட்டுமின்றி விரிவாக்கப்பட்ட பதிப்பாகவும் விளங்க வேண்டும்.

இந்தப் பணிக்கு இப்போது ஆபத்து வந்து விடும் போலிருக்கிறது. திரு அவிநாசிலிங்கம் செட்டியார் மாநில கல்வி அமைச்சராக இருந்தபோது திரு தூரனை ஆசிரியராகக் கொண்டு கலைக்களஞ்சியப் பணியை ஆரம்பித்து வைத்தது தமிழ் வளர்ச்சிக் கழகம். இதில் இப்பத்திரிகையின் ஸ்தாபக ஆசிரியருக்கும் பெரும் பங்கு இருந்தது. அன்றைக்கு இருந்த பொருளாதாரச் சூழல், விலைவாசிகளின் நிலை, சம்பந்தப் பட்டவர்களுக்கு இருந்த லட்சிய வெறி ஆகிய எல்லாமாகச் சேர்ந்து கலைக் களஞ்சியங்கள் குறைந்த செலவில் உருவாக வழி வகுத்தன.

ஆனால் நாளடைவில் விலைவாசிகள் மிகவும் உயர்ந்து விட்டன. எதிர் காலத்தில் மேலும் உயரத்தான் போகின்றன. ஊழியர்களுக்கு ஊதியமும் பல மடங்கு அதிகரித்துத் தர வேண்டும். முன்பு 3000 பிரதிகள் அச்சிட்டதற்குப் பதில் இப்போது இரண்டாம் பதிப்பைப் பத்தாயிரம் பிரதிகள் அச்சிடலாம் என்று தீர்மானமாகியுள்ளது. எனவே கலைக் களஞ்சியத்தின் புதிய பதிப்புக்கு 75 லட்சம் ரூபாய் செலவாகும் என்று அவிநாசிலிங்கம் செட்டியார் தலைமையில் இயங்கும் தமிழ் வளர்ச்சிக் கழகம் மதிப்பிட்டு அரசாங்க மானியத்தையும் கோரியுள்ளது.

அரசு ஏற்கெனவே இரண்டு லட்சமும், மேலும் மூன்று லட்சமும் இப் பணிக்கு ஒதுக்கியுள்ளது. ஆனால் கோரப்பட்ட மொத்த உதவியையும் அளிப்பதாக அரசிடமிருந்து இதுவரை வாக்குறுதி ஏதும் கழகத்துக்கு வரவில்லை. இந் நிலையில் கலைக் களஞ்சியப் பணியை மேலும் தொடர்வது உசிதமாகுமா என்று ஐயப்பட்டுத் தமிழ் வளர்ச்சிக் கழகம் வேலைகளை நிறுத்தி வைத்துள்ளது.

அரசாங்கமோ 75 லட்சம் என்ற மதிப்பீடு மிகவும் அதிகம் என்றும் கலைக் களஞ்சியத்தைத் தயாரிக்கும் பணியை மட்டும் தமிழ்வளர்ச்சிக் கழகம் செய்தால் போதும், அச்சிடும் பணியை அரசே ஏற்றுக் கொள்ளலாம் என்றும் கருதுவதாகத் தெரிகிறது. கலைக் களஞ்சியத்தைத் தயாரித்தளித்து விட்டால் தமிழ் நாடு பாடப் புத்தகக் கமிட்டி மூலமாக அச்சடித்துக் கொள்ளலாம் என்று அரசு எண்ணுவதாக அறிகிறோம். ஆனால் இதற்கும் உறுதியான ஒப்புதல் ஏதும் அரசு அளிக்கவில்லை.

இதற்கிடையில் வேலை நிறுத்தப் பட்டுள்ளதால் கலைக்களஞ்சியம் இரண்டாம் பதிப்புப் பணியில் இதுகாறும் ஈடுபட்டிருந்த ஊழியர்கள் சஞ்சலமடைந்துள்ளனர்.

'இந்த ஆட்சிக்காலத்தில் கலைக் களஞ்சியப்பணி நின்று போயிற்று' என்ற அவப்பெயரை ஏற்க முதல்வர் விரும்புவார் என்று எண்ணவே இட

மில்லை. அவிநாசிலிங்கம் செட்டியாரைத் தலைவராகக் கொண்ட தமிழ் வளர்ச்சிக் கழகமும் இந்தப்பணி தடைப்பட்டு நின்று போவதை நிச்சயம் விரும்பாது.

ஆக, தேவைப் படுவதெல்லாம் கழகத்தினரும் அரசினரும் கலந்து பேசி ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து ஒரு நல்ல முடிவுக்கு வர வேண்டியது தான். இரு தரப்பினரும் நேசமுடன் தமிழன்பு மிக இதனைச் செய்வார்கள் என நம்புகிறோம்.

கலைக் களஞ்சியத்தின் இரண்டாம் பதிப்பை கால தாமதமின்றிச் சிறப்பாக வெளியிடும் பொறுப்பை ஏற்க அறிவாற்றலும் செயலூக்கமும் செல்வாக்கும் நேர்மையும் மிக்க ஒருவர் தேவைப்படுகிறார். நமக்கு உடனே திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் நினைவுதான் வருகிறது. தமிழ் வளர்ச்சிக் கழகத் தலைவர் திரு அவிநாசிலிங்கம் செட்டியாரும் தமிழக முதல்வரும் வற்புறுத்தினால் திரு சி. எஸ். மறுத்து விடவா போகிறார்?

அவருடைய 'நிர்வாகத் தலைமையில் அளவில் குறைந்ததும் ஆற்றலில் சிறந்ததுமான ஓர் ஆசிரியர் குழாம் அமைந்து பணியைச் செவ்வனே அனாவசியக் கால தாமதங்கள் இன்றி நடத்தி முடிக்க வேண்டும் என்று பெரிதும் விரும்புகிறோம்.

தமிழகத்தின் முன்னேற்றத்தில் தமிழின் முன்னேற்றம் முக்கியமானதொரு அங்கமல்லவா?

---

## 'தர்மசங்கடம்'

தம்பு!








## திருப்பதி லட்டு

தஞ்சை மணியன்

திருப்பதியில் இரண்டு சமையலறைகள் உள்ளன! ஒன்றில் பொங்கல் புளியோதரை - தயிர் சாதம் - முதலியவை தயாராகின்றன! இவற்றுக்காக சுமார் 40 - 50 - சமையற்காரர்கள் 'ஷிப்ட்' முறையில் அனுதினமும் எண்ணூறு முதல் ஆயிரம் கிலோ - அரிசியை வடித்துக் கொட்டுகிறார்கள்!

பெரிய அண்டா, பித்தளைத் தவலைகள் உபயோகிக்கக் கூடாது என்று ஐதீகம் இருப்பதால் ஒரு கிலோ, மட்டுமே வடிக்கக் கூடிய மண் பாத்திரங்களில் ஓய்வின்றி வடித்துக் கொட்டுகிறார்கள்!

காஸ் அடுப்பு - எலெக்ட்ரிக் அடுப்பு - ஸ்டவ் - ஆகியவைகளையும் உபயோகிக்கக் கூடாது; விறகு அடுப்புதான்! குழாய்த் தண்ணீரும் கூடாது!

கிணற்றிலிருந்து - சமையலுக்கு வேண்டிய தண்ணீரை இழுத்துக் கொட்டுவது - கல்லுரலில் அரைப்பது கல் இயந்திரத்தில் பொடிகள் தயாரிப்பது அனைத்துமே மனிதர்கள்தாம் செய்கிறார்கள்! இயந்திரங்கள் எதுவும் கிடையாது!

இரண்டாவது சமையலறையில் விற்பனைக்காக ஒரு நாளைக்கு கிட்டத் தட்ட இருபதாயிரம் லட்டுகள் செய்யப் படுகின்றன! திருவிழா நாட்களில் ஐம்பதாயிரம் — சில நாட்களில் ஒரு லட்சம் லட்டுகள்கூடத் தயாரிக்கப்படுகின்றன!

லட்டு உருண்டைகள் களவு போகாமலிருப்பது - அளவு குறையாமல் இருப்பது ஆகியவற்றைக் கண்காணிக்க, லஞ்ச ஒழிப்பு அதிகாரிகள் - சூபர்வைசர்கள் ஆகியோர் இருப்பார்கள்!

நூறு லட்டுகள் கொண்ட ஒவ்வொரு கூடையும் பேஷ்கார், என்ற அதிகாரியின் மேற்பார்வையில் 'வெயிட், மெஷினி'ல் எடை பார்க்கப் பட்டபின் அனுமதி பெற்றுத்தான் வெளியே கொண்டு செல்லப் படுகிறது!

ஆதாரம்: ஆன்லுக்கர்

# “உயர்மட்டக்குழு உருவாகட்டும்!”

தற்போதைய பாராளுமன்ற உறுப்பினராக உள்ள திரு. ஆர். வெங்கடராமன் தமிழக அரசில் தொழில் அமைச்சராக இருந்த போது தொழில் துறையில் தமிழகம் பெற்ற வளர்ச்சியும், வகித்த உன்னத நிலையும் யாவரும் அறிந்ததே. திரு. ஆர். வி.யைச் சந்தித்துத் தொழில் துறையில் தற்போது தமிழகம் இருக்கும் நிலையைப் பற்றியும், அந்நிலைக்கான காரணங்கள் பற்றியும் விவாதித்தபோது அவர் வெளியிட்ட கருத்துக்கள்:

★

''தற்போது தமிழகத்தின் தொழில் துறை வளர்ச்சி பின் தங்கிய நிலையில்தான் உள்ளது.

காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் ஒரு நாளைக்கு ஒரு புதிய தொழிற்சாலையையாவது திறக்க வேண்டும் என்கிற லட்சியத்தை மேற்கொண்டு இக்கொள்கையில் மூன்று நான்கு ஆண்டுகாலம் வெற்றியும் கண்டோம். அப்போது தொழில் வளர்ச்சியில் பிரமிக்கத் தக்க வளர்ச்சி தமிழகத்தில் ஏற்பட்டு இந்திய அரங்கில் தொழில் துறையில் தமிழகம் ஒரு முக்கிய அங்கம் வகிக்கும் நிலையில் இருந்தது.

தொழிலதிபர்கள் புதிய தொழிற்சாலைகள் அமைக்க வேண்டும் என்று மாநில அரசை அணுகினால் அவர்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்ததோடு மட்டுமின்றி அரசிடமிருந்து தொழில் லைசென்ஸ் பெறுதல், மத்திய அரசிடமோ, மற்றைய கடனுதவி ஸ்தாபனங்களிலிருந்தோ (*Financial Institutions*) பண உதவி பெறுதல் போன்றவற்றிற்கு எல்லாவித உதவிகளையும் மாநில ஆட்சி அளித்து வந்தது.

அது மட்டுமின்றித் தொழில் திறமையும் வசதியும் உள்ளவர்கள் அரசை நாடி வர வேண்டும் என்று காத்திராமல் அரசே அவர்களைக் கண்டுபிடித்துத் தேடிச் சென்று உதவியது; ஊக்கமளித்தது.

குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில் எந்தத் தொழிலை ஆரம்பித்தால் தழைத்தோங்க வாய்ப்பு உள்ளது என்று ஆராய்வோம். தனியார் துறையில் தொழில்கள் தோன்றுவதானாலும் கூட, அத்தொழில் சம்பந்தமான நுணுக்கங்களை நான் மேல் நாடுகளுக்குச் சென்று அங்குள்ள தொழிற்சாலைகளுக்கு விஜயம் செய்து, கண்டு, கேட்டறிந்து வந்து உதவுவது உண்டு. *United Nations Administration Tribunal* என்கிற அமைப்பில் அப்போது நான் அங்கத்தினராக (தற்போது தலைவராக) இருந்ததால் அடிக்கடி மேல் நாடுகளுக்குச் சென்று வரும் வாய்ப்பு ஏற்படும். இந்த வாய்ப்பைத் தமிழகம் தொழில் துறையில் முன்னேறவும் உபயோகப் படுத்துவோம்.

தமிழ்நாட்டில் பேப்பர் தொழிற்சாலை திறக்கப்பட்ட போது அதற்காக மேனாடுகளில் வேண்டிய விவரங்கள் திரட்டி அரசு உதவி புரிந்துள்ளது. அம்மாதிரியே அலுமினியம் தொழிற்சாலை துவங்கப் பட்டபோதும், பிரான்ஸ், இத்தாலி, ஹங்கேரி ஆகிய நாடுகளுக்கு விஜயம் செய்து அலுமினியத் தொழில் சம்பந்தமாகப் பல வித நுணுக்கங்களைச் சேகரித்து உதவியது உண்டு.

திரு காமராஜ் முதலமைச்சராகவும், நான் தொழிலமைச்சராகவும் இருந்த போது ஒரு தடவை திரு காமராஜ் ''நீங்க எப்போ மறுபடியும் மேல் நாடு போகணும்?'' என்று என்னைக் கேட்டார். நான் அடிக்கடி போவதால் நிர்வாகத்துக்கு இடைஞ்சலாக உள்ளது என்பதால் கேட்கிறாரோ என்னும் நினைப்பில், ''போக வேண்டும் என்கிற கட்டாயமில்லை. தள்ளிப் போட்டுக் கொள்ளலாம்!'' என்று பதிலளித்தேன். அதற்கு அவர், ''நீங்க போக வேணும்னு சொல்லலை. நீங்க போயிட்டு வந்தாத்தான் புதுசாத் தொழிற்சாலைகள் உண்டாகும்!'' என்றார்.

தமிழகம் போன்று இயற்கை வளத்தில் பின்தங்கிய மாநிலங்களுக்கு மத்திய அரசு சிறந்த முறையில் உதவி செய்து தொழில் வளம் பெருக ஆவன செய்ய வேண்டியது அவசியமாகிறது. இங்கு நிலக்கரி இல்லை. தண்ணீர் பற்றாக்குறை. இரும்பு போன்ற

## ஆர்.வி.பேட்டி



கனிரகங்கள் தமிழ் நாட்டில் இடையாது. பழுப்பு நிலக்கரி உள்ளது. அதுவும் எவ்வளவோ ஆழத்தில் உள்ளதால் வெட்டி எடுப்பதற்குச் செலவு அதிகம்.

பின் தங்கியுள்ள மாநிலங்களின் வளர்ச்சிக்காக இந்தியா முழுவதிலும் ஒரே சீரான விலைக்கு இரும்பு, எஃகு விற்பனை செய்யும் முறைக்கு அரசாங்கம் வழி வகுத்துள்ளது. இதனைச் சாதகமாக்கிக் கொண்டு இன்ஜினிரிங் தொழிற்சாலைகள், ஆடோமொபைல் தொழிற்சாலைகள், ரோலிங் மில்ஸ் முதலியவற்றை நாங்கள் அமைத்தோம். இந்தியா முழுவதுக்கும்தேவையான 'ஆடோமொபைல் ஸ்பேர் பார்ட்,களில் 80 சதவீதத்தைத் தமிழகமே உற்பத்தி செய்த பெருமை எங்களை வந்தடைந்ததோடு மட்டுமின்றி தமிழகத்தை 'இந்தியாவின் டெட்ராய்ட்' என்றே அழைக்கப்படும் நிலை இருந்தது.

தொழிற் சாலைகளைப் புதிது புதிதாகத் தோற்றுவித்துத்தொழில் வளம் சிறந்தோங்கச் செய்ய வேண்டும் என்கிற உற்சாகமே தற்போது இல்லை. முன்பு போலவே தொழிலாளர்களிடம் சிறந்த தொழில் திறமை தற்போதும் இருந்தாலும், முன்பு இருந்த ஒழுங்கு முறைகள் தற்போது இல்லை. இதற்கு முக்கியமான ஒரு காரணம் உள்ளது. தொழிலாளர் பிரச்னைகள் உடனுக்குடன் தீர்க்கப் படாததுதான். இம்மாதிரி உடனுக்குடன் தீர்க்கப் படாமல் தள்ளிப் போட்டுக் கொண்டே போவதால் பலவித சிக்கல்களுக்கு இது காரணமாகித் தொழில் வளர்ச்சி பாதிக்கப் படுகிறது.

தொழில் வளர்ச்சிக்கு அவசியமானவைகளில் முக்கிய ஸ்தானத்தை வகிப்பது மின் சக்தி (Energy). உற்பத்தி விஷயத்திலும், சரியான முறையில் இதனை விநியோகிப்பதிலும் காங்கிரஸ் அரசு தீவிரமான கவனம் செலுத்தியது.

திரு கருணாநிதி ஆட்சிக் காலத்தில் மின்சக்தி உற்பத்தியில் போதிய கவனம் செலுத்தப் படாமல் தமிழகம் மிகவும் பின் தங்கி விட்டது. எங்கள் காலத்திலேயே நீர் மின் (Hydro Power) உற்பத்தி செய்ய வாய்ப்புக்கள் ஏறக்குறைய முடிந்து விட்டன. இந்நிலையில் அனல்மின் (Thermal Power) உற்பத்தியில் பின்பு வந்த அரசுகள் கவனம் செலுத்தியிருக்க வேண்டும். தவறி விட்டன. தமிழகம் தொழில் துறையில் வளர்ச்சி அடையாததற்கு இது ஒரு முக்கிய காரணம்.

தற்போதைய சூழ்நிலையில் தமிழகத்தில் எலெக்ட்ரானிக் தொழிற்சாலைகள் அமைத்தால் சிறப்படைய வாய்ப்புகள் நிறைய உள்ளன.

முதல் மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களுக்குப் பிறகு வந்த திட்டங்கள் எதிர் பார்த்த பலனை அளிக்கவில்லை. காரணம் என்ன? திட்டமிடும் அடிப்படை முறையில் பொருளாதார வளர்ச்சியை மட்டுமே மனத்தில் கொள்ளாமல் அரசியலையும் கலந்ததுதான். பின் வந்த திட்டங்கள் சரியாகக் கணிக்கப்படவுமில்லை, பலனும் கிடைக்கவில்லை.

தமிழகத்தைப் பொறுத்த மட்டில் தொழில் துறைக்காகத் தனியாக மந்திரி நியமிக்கப்பட வேண்டும். தொழில் துறை மந்திரியை அத்துறை சம்பந்தப்பட்டவர்கள் எந்நேரத்திலும் சந்திக்க வாய்ப்பு இருக்க வேண்டும். முதலமைச்சர் பதவிக்கு ஏராளமான பொறுப்பு உண்டு. அவரே தொழில் துறைப் பதவியையும் வகிப்பதால் தொழில் துறைக்குப் போதிய அவகாசமளிக்க முடிவதில்லை.

தொழில் துறையை முன்னேற்றம் அடையச் செய்ய தனியாகத் திறமையுள்ள ஓர் உயர்மட்டக் குழுவை (High Power Committee) அரசாங்கம் நியமித்து அவர்களிடம் புதிய தொழிற்சாலைகள் அமைக்கத் தேவையான அதிகாரங்களையும் அளிக்கலாம்.

இவ்விஷயங்களில் அதிகக் கவனம் செலுத்தி, தொழிலகங்களை அமைக்க முன் வருபவர்களை உற்சாகப் படுத்தி, உதவியும் அளித்து, செயல் பட்டால் தமிழகம் தொழில் துறையில் பழைய நிலையை நிச்சயம் விரைவில் பெற முடியும்!''

பேட்டி: **பி. ரங்கநாயகி**



போக்குவரவுத் துறையில், பாரதத்திலேயே முதல் இடத்தை நம் தமிழகம் தான் அடைந்திருக்கிறது. சமீபத்தில், தமிழ்நாட்டில் சுற்றிப் பார்த்த ஒரு டில்லி பத்திரிகை நிருபர், டில்லியிலுள்ள பஸ் டிரைவர், கண்டக்டர் அனைவரும் தமிழ் நாட்டிற்கு வந்து சிறிது காலம் பயிற்சி கூட எடுத்துக் கொள்ளலாம் என்று குறிப்பிட்டுள்ளார். வட இந்தியாவிலிருந்து இங்கு வரும் நண்பர்கள் கூட இங்கு உள்ள மாதிரி வசதி அங்கெல்லாம் கிடையாது என்று சொல்கிறார்கள். குக்கிராமங்களுக்குக் கூட பஸ்கள் செல்கின்றன. நினைத்த நேரத்தில், நினைத்த இடத்திற்குச் செல்ல, சாதா வண்டி, துரித வண்டி, மின்னல் வேக வண்டி என விதவிதமான பஸ்கள் ஓடுவது தமிழகத்தின் முன்னேற்றமே.

தமிழகத்தில் மின்சாரம் இல்லாத கிராமமே இல்லை. பம்பு செட்டுகள் இல்லாத வயலே இல்லை என்று சொல்லலாம். ரயிலில் பிரயாணம் செய்யும் போது நாமே உணர்ந்து கொள்ளும் முன்னேற்றம் இது.

குடும்ப நலத் திட்டத்திலும் தமிழகத்திற்குத்தான் முதல் ஸ்தானம். குடும்ப நலத் திட்டத்தை மேற் கொண்டவர்கள் பத்து வருடங்களுக்கு முன்னால் 11 சதவிகிதம்தான். இப்போது 22 சதவிகிதமாக உயர்ந்துள்ளது.

மீனாட்சி வைத்தியநாதன்

# "நம்பிக்கை பிறக்க வேண்டும்!"

## தொழிலதிபர் ஜி.கே.சுந்தரம் பேட்டி



''எமெர்ஜென்சி காலத்தில்தான் உற்பத்தி அதிகமாயிருந்தது. இப்பொழுது மிகவும் குறைந்து விட்டது. எமெர்ஜென்சியே பரவாயில்லை என்று பலர் கூறுகிறார்கள். உங்கள் எண்ணம் என்ன?''

உற்பத்தியைப் பொறுத்தளவில் எமெர்ஜென்சி வரவேற்கத் தக்கதே. ஆனால் எமெர்ஜென்சி கால அட்டூழியங்களையும், அராஜகங்களையும் நினைத்துப் பார்க்கும் பொழுது, விரும்பத் தகாததாகத்தான் எமெர்ஜென்சி இருக்கிறது. எமர்ஜென்சி இருந்தால்தான் தேசம் முன்னேறும் என்கிற நிலை நல்லதல்ல. நம்மிடம் உற்பத்தித் திறமை இருக்கிறது. வாய்ப்பும் இருக்கிறது என்பதை எமர்ஜென்சி நிரூபித்துள்ளது. எமர்ஜென்சி இல்லாத நிலையில் நமக்கு உழைப்பதற்கு மனம்தான் இல்லை.

''மத்தியில் ஜனதா பதவிக்கு வந்த பிறகு தொழில் துறையில் மேலும் நாம் முன்னேற்றம் அடைய என்ன செய்திருக்கிறார்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

குறிப்பாகச் சொல்ல வேண்டும் என்றால் சோப்பு, நெருப்புப் பெட்டி போன்ற பொருள்களைத் தயாரிக்கும் சிறு தொழிலகங்களுக்குப் பல்வேறு வகைகளில் சலுகைகளை அளித்திருக்கின்றார்கள். அதுவும் பெரிய தொழிற்சாலைகளுக்குச் சிரமம் விளையும் வகையில் தான் அளித்திருக்கிறார்கள். இந்தச் சலுகை அளித்திருக்கிறார்களே தவிர ஜனதா அரசின் போக்கினால் விளைந்த பாதகங்களே அதிகம். ஜனதா அரசில் உள்ளவர்கள் பேசிப் பேசியே தொழில்துறை முன்னேற்றத்தைக் கெடுத்தார்கள். நாடு முழுவதும் தொழிலாளர்கள் பலவித வேலை நிறுத்தங்களிலும் ஆர்ப்பாட்டங்களிலும் தங்களை இணைத்துக் கொண்டார்கள். ஜனதா கட்சி ஆட்சிக்கு வந்த பிறகு நாட்டுக்கே ஆபத்து ஏற்படும் அளவுக்கு இந்தப் போக்கு வளர்ந்து வருகிறது.

மின்சாரம், கரி, இரும்பு, உற்பத்தி திருப்திகரமாக இல்லை. எல்லா விதமான போக்குவரத்துச் சாதனங்களும், (ரயில், விமானம், லாரி) நாட்டுக்குத் தீமை உண்டாகும் அளவுக்குச் சீர்கெட்டு வருகின்றன. இவர்களால் இதைச் சீர்ப்படுத்த முடியாது. இங்கிலாந்தில் கடந்த மூன்று, நான்கு வருடமாக எப்படி நடந்து கொண்டு வந்ததோ அது மாதிரிதான் இங்கும் நடந்து கொண்டு வருகின்றது. தொழிலக சங்கங்கள் அதிகாரத்திற்கு வர வேண்டும் எனக் கேட்கின்றன. ஜனதா அரசும் அதற்கு இடம் கொடுத்து வருகிறது. தொழிற் சங்கங்களின் ஒத்துழைப்பு இல்லாததால் எல்லாத் தொழில்களிலும் பெரிய அளவு பாதிப்பு ஏற்பட்டு இருக்கின்றது.

''தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில் தொழில் துறை பெருகுவதற்கு என்ன செய்ய வேண்டும்? ஏன் நாம் இத் துறையில் முன்னேற்றம் அடைகிற வேகம் குறைந்திருக்கிறது?''

தமிழ்நாடு தொழில் முன்னேற்றம் அடைய ஆரம்பித்தது 1930ல்தான். 1957ம் ஆண்டு வரையில் தொழில் துறை விருத்தி அடைந்தது. அதாவது இரண்டு தேர்தல்கள் வரை. அதற்குப் பிறகு ஒருசில கனரகத் தொழில்கள் முன்னேறின. ஆர்வி இருந்த காலத்தில் நடந்த முன்னேற்றங்கள்தான். அதற்குப் பிறகு கணிசமான முன்னேற்றம் என்று குறிப்பிடும்படி இல்லை.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் தொழில்துறை பெருகுவதற்கு முதலில் முதலீடு செய்ய நிறைய பேர் முன்வர வேண்டும். தொடர்ந்து லாபம் கிடைக்கின்றது எனத் தெரிந்தால்தானே நம்பிக்கை பிறந்தால் தானே முதலீடு செய்வார்கள்? அந்த நம்பிக்கை போய்ப் பதுங்கி வருடமாகி விட்டது. Risk எடுக்க யார் முன்வருவார்கள்?

அரசு, தொழிலாளர்கள், சட்டங்கள் ஆகிய எல்லாமே இதற்குக் காரணம். தனிப்பட்ட யார் மீதும் குற்றம் சொல்ல முடியாது. சிறு தொழில் செய்பவர்கள் அதை விட்டுப் போனால் போதும் என்று இருக்கிறார்கள்!

''வேலை நிறுத்தங்கள் இன்று அதிகமாகி விட்டன. வேலை நிறுத்தங்கள் நடக்கக் கூடாது என்று சட்டம் கொண்டு வருவதும் ஜனநாயகத்தில் சாத்தியமில்லை. இந்தச் சிக்கலைத் தீர்ப்பதற்கு என்ன வழி?''

*Right to strike* இருக்க வேண்டியதுதான். ஆனால் அந்த உரிமையை எந்தச் சூழலில் எத்தகைய நிபந்தனைகளுடன் பயன்படுத்த வேண்டும் என்று நிர்ணயிக்கலாம் இல்லையா? நினைத்ததற்கெல்லாம் வேலைநிறுத்தம் என்றால் அது நாகரீகமாகாது; *jungle law* ஆகிவிடும். ஆகவே வேலை நிறுத்தங்களை எந்தக் கட்டத்தில் கையாளலாம் என்பது நிர்ணயிக்கப்பட வேண்டும். அதனை அமுல் செய்யவும் வேண்டும். வேலை நிறுத்தங்கள் எல்லாமே அரசியல் கட்சிகளால் தூண்டப் படுபவை. அரசியல் கட்சிகள் துணையோடு ஒத்துழைப்போடு நடத்தப் படுபவை. பெரும்பாலான வேலை நிறுத்தங்கள் உண்மையான தேவைக்காக நடத்தப் படுபவை அல்ல. நிரூபணம் தேவை எனில், எல்லாமே ஏக காலத்தில் வருகின்றனவே ஏன்? அரசு ஊழியர்கள் வேலை நிறுத்தம், விவசாயிகள் போராட்டம், மாணவர்கள் போராட்டம் பஸ் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம், மின் தொழிலாளர்கள், வங்கிகள், எல். ஐ. ஸி. இவர்களுடன் இப்பொழுது போலீஸ்காரர்களும் வேறு இணைந்து இருக்கிறார்கள்!

''எதற்கெடுத்தாலும் அரசையே குறை கூறாமல் தனியார்த் துறையினர் அவர்களாகவே ஒற்றுமையாக இணைந்து தமிழக முன்னேற்றத்தில் என்ன செய்ய முடியுமென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

இன்றைய அரசின் தொழில் கொள்கை என்ன என்று பார்க்க வேண்டும். தனியார் துறை அரசுத் துறை இரண்டும் இணைந்த ஒரு கலப்புப் பொருளாதாரம். இதிலும் அரசுத் துறைக்குத்தான் மேலாதிக்கமான முக்கியத்துவம். இந்த மாதிரி இருக்கும் பொழுது தனியார்த் துறை இரண்டாம் பட்சம் என்றுதான் ஆகிறது. அதன் பாகம் மிகமிகச் சிறியது எனக் கூறலாம். சர்க்கார் எல்லாப் பொறுப்புக்களையும் தன்வசத்தே ஏற்றுக் கொண்ட பிறகு சர்க்காரை அல்லாமல் வேறு யாரையும் குற்றம் கூற முடியாது. முதன் முதலில் அந்தக் காலத்தில் காங்கிரஸ் அரசு செய்த மிகப் பெரிய தவறு மின்சார உற்பத்தியை அரசே எடுத்துக் கொண்டதுதான். 'உனக்கு வேண்டியது மின்சாரம் தானே? நான் கொடுக்கிறேன்' என்றார்கள். மின்சாரம் தொடர்ந்து 24 மணி நேரமும் கிடைக்க வேண்டும். ஆனால் ஒரு நாளில் எவ்வளவு நேரம் தடைப்பட்டுப் போகிறது என்பதற்குக் கணக்கு வழக்கே கிடையாது.

தனியார் நிறையவே தொழில் செய்கிறார்கள். ஆனால் ஏராளமானவர் திருட்டுத் தனமாகச் செய்கிறார்கள். உதாரணத்துக்கு ஆயிரக் கணக்கான விசைத் தறிகள் சின்னத் தோட்டங்களிலும், குடிசைகளிலும் நடத்தப் பட்டு வருகின்றன. திருட்டுத் தனமாகச் செய்வதனால்தான் அவர்களால் தொழில் செய்ய முடிகிறது. இல்லையென்றால் உயர்ந்த மின் கட்டணம், பலவித வரிகள் ஆகியன அவர்களைத் தலையெடுக்க விடாது!

அடுத்த ஐந்து வருடங்களுக்கு இதுதான் வரி, இதுதான் திட்டம் மாறுதலிராது என உறுதி கொடுத்து உற்சாகப்படுத்த வேண்டும். இன்று ஒரு பிரச்னையை அரசு எடுத்துப் பார்ப்பதற்கே ஆறு மாதம் ஆகிறது!

''மின்சாரம் தமிழ்நாட்டில் போதிய அளவிற்கு இருக்கிறதா? நீண்ட கால நிலையில் பார்க்கும் போது நம்மிடம் போதிய அளவிற்கு மின் உற்பத்தி பெருகத் திட்டங்கள் வகுக்கப் பட்டுள்ளனவா? அத்திட்டங்கள் நிறைவேற்றப் படுகின்றனவா? சந்திக்கும் இடையூறுகள் என்ன? அதற்காக நாம் எடுத்துக் கொள்ள வேண்டிய வழிமுறைகள் என்ன?''

எப்பவுமே இருந்தது இல்லை. இரண்டாவது கேள்விக்கு இல்லை என்றுதான் கூற வேண்டும். மூன்றாவது கேள்விக்குப் பதில் இருக்கிற திட்டங்களும் ரொம்பவும் கால தாமதமாக நிறைவேற்றப் படுகின்றன என்பதுதான். விநியோக முறையும் சரியில்லை. இருக்கிற மின் நிலையங்களைப் பராமரிப்பதும் போதவில்லை. இருக்கிற மின்சாரத்தை அழகாகப் பகிர்ந்து கொடுக்கலாம். அத்தியாவசியமான நிறுவனங்களுக்கு அளித்து விட்டு மற்றவற்றுக்கு அவர்களாகவே மின் உற்பத்தி செய்து கொள்வதற்கு வழி வகுத்து ஊக்கமளிக்கலாம்.

''தமிழ்நாட்டில் உள்ள கனிப்பொருள்கள், கச்சாப் பொருள்கள், மக்கள் சக்தி ஆகியன முழுமையான அளவுக்குப் பயன்படுத்தப் படுகின்றனவா? இதற்கு

''என்னடி, இந்தப் படத்துக்கு இவ்வளவு கூட்டம்?''
''ஒரு 'சீன்'லே முழுசா அஞ்சு... லிட்டர் கெரசினைக் காண்பிக்கறாங்கடி:..!''
ஆர். எஸ். ராம்



இன்னும் என்ன செய்யலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

கனிப் பொருள்கள், கச்சாப் பொருள்கள், திறமை ஆகியவைகளை நாம் முழுமையாக உபயோகப் படுத்தவில்லை. நிர்மாணப் பணி ஆக்கப்பணிக்கு மக்கள் சக்தி பக்கத்தில் கூட வருவதில்லை. வேலைநிறுத்தங்கள், தேவையில்லாத ஆர்ப்பாட்டங்கள், வன்முறைகள் ஆகிய வற்றிற்குத்தான் மக்கள் சக்தியே பயன் படுத்தப் படுகின்றது. முதலில் இத்தகைய சூழ்நிலைகளை மாற்ற வேண்டும். மக்கள் சக்தி இந்த வகைகளில் வீணாகாமல் இருக்கும் நிலையை உருவாக்க வேண்டும். அப்புறமல்லவா ஆக்கப்பணி?

''தமிழ் நாட்டில் வேலையில்லாத் திண்டாட்டத்தைப்போக்கத்தொழில் துறை எந்த அளவுக்கு உதவி செய்யும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

அண்ணாதுரை முதலமைச்சராக இருந்த பொழுது தொழில் துறை சம்பந்தப்பட்டவரை ஒன்றாக அழைத்துத் தொழில் துறை முன்னேற்றமடைய என்ன செய்யலாமென்று யோசனை கேட்டார். அப்பொழுது நான், '''விசைத்தறி கூடாது, கைத்தறி வேண்டும்' என்கிறீர்கள். இது உங்கள் கொள்கை. சரிதான். ஆனால் பீகாரில் லக்ஷக்கணக்கான விசைத் தறிகள் அன்றாடம் அதிகரித்துக் கொண்டே வருகின்றன. நமது நூல் பீகார் சென்று நமக்கே திரும்பத் துணி உருவில் வந்து விற்கப் படுகின்றது. அதை மாற்றி நாமே துணிகளை நெய்து இங்கும் பிற மாநிலங்களிலும் நாமே விற்பனையும் செய்தோமென்றால் வேலை வாய்ப்பும் அதிகரிக்கும், பல்வேறு விதங்களில் நன்மையும் கிடைக்கும். நூறு விசைத் தறிகளைக் கொண்ட சிறு ஆலைகள் பல்வேறு இடங்களில் அமைக்க வேண்டும். அவைகளுக்கு உதவிகளையும் வசதிகளையும் செய்து கொடுக்க வேண்டும்'' என்றேன். இதில் ஆச்சரியம் என்னவென்றால் அன்றும் சரி இன்றும் சரி அரசியல் தலைவர்களுக்கு எல்லாமே தெரிந்திருக்கிறது. என்னைப் போன்றவர்கள் கூறும் எல்லாவற்றையும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் அவர்களால் ஒன்றுமே செய்ய முடிவதில்லை! நேர்மையுடன் நடக்கும் தொழில்களை நாம் தடை செய்கிறோம். ஏமாற்று வேலைகளுக்கு ஊக்கமளிக்கிறோம். லேபர் நியூஸ் என்ற பத்திரிகையின் மார்ச் இதழில் 150வது பக்கத்தில் ஒரு செய்தி வந்துள்ளது. ஆந்திரா, கேரளா, மகாராஷ்டிரம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் 30.9.78 அன்று எடுத்த கணக்கின்படி சுமார் 10 லக்ஷம் பேர் வேலையில்லாமல் இருக்கிறார்கள். மக்கள் தொகை அதிகமாக உள்ள கேரளாவிலும் 10 லக்ஷம்தான். நமது மாநிலத்தை விடப் பெரிதாக உள்ள மகாராஷ்டிராவிலும் 10 லக்ஷம்தான். ஜனத் தொகையிலும், அளவிலும் சிறிய மாநிலமான தமிழ் நாட்டிலும் 10 லக்ஷம் பேர் வேலையில்லாமலிருக்கிறார்கள். ஆக, வேலையில்லாத் திண்டாட்டம் நமது மாநிலத்தில் தான் அதிகமாக இருக்கிறது என்று கூறலாம்.



ஃ வறுமை மிகவும் கொடியது தான். ஆனால் வறுமைக்கு மருந்து பணம் என்று பலர் கருதுகிறார்கள். உழைப்பும் உழைப்புக்கு அடிப்படையான முயற்சியுமே வறுமைக்கு மருந்து!

ஃ திருக்குறள் தோன்றிய நாடு நமது தமிழ்நாடு என்ற பெருமை மட்டும் நமக்குப் போதாது. 'குறள் நெறி' நடைமுறையில் உள்ள நாடு என்ற பெருமையை நாம் உண்டாக்க வேண்டும்.

ஃ சுதந்திரம் வாங்குவது பெரிதல்ல. சுதந்திர சமுதாயத்தை உருவாக்குவது தான் பெரிது. மக்களிடத்தே உணர்ச்சி பூர்வமான மாறுதல் ஏற்படாத வரையில் புதிய சமுதாயத்தை அமைக்க முடியாது.

ஃ மனிதன் கோயிலுக்குள் சென்று ஆண்டவன் முன்னிலையில் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்குவது தவிர, இங்கு யாரும் சோற்றுக்காகவே கண்ணீர் சிந்தும் நிலை இருக்கக் கூடாது.

ஃ ஒருவருக்கொருவர் மாறிக் கவலைப் படுகிறவர்களே நல்ல மனிதர்கள்; தங்களைப் பற்றியே கவலைப்பட்டுக் கொள்பவர்கள் சுயநல வாதிகள். மாறிக் கவலைப்படுகின்ற மனிதர்கள் நிரம்பிய சமுதாயத்தில் எல்லோரும் நலமாக வாழ்வார்கள்; அமைதியும் அன்பும் இன்பமும் அங்கு குடிகொண்டிருக்கும்.

—குன்றக்குடி அடிகளாரின் 'அமுத மொழிகள்' என்னும் நூலிலிருந்து.
—இரா. மோகன்.

---

நகர்ப்புற நில உச்ச வரம்புச் சட்டம் எப்பொழுது வந்ததோ அன்றே தொழில் துறையைப் பொறுத்த அளவில் பெரிய அபாயமொன்று வந்து விட்டதாகத்தான் நான் சொல்வேன். இந்தச் சட்டம் ஒன்றே போதும் எல்லா விதமான தொழில் முன்னேற்றங்களையும் நிறுத்திவிட.

''மேற்சொன்ன கேள்விகளைத் தவிர தமிழ் நாட்டைப் பொறுத்த வரை தொழில் துறையில் முன்னேற்றம் அடையத் தாங்களாகவே ஏதாவது யோசனைகளைச் சொல்ல விரும்புகிறீர்களா?''

கேட்பவரில்லாத போது அறிவுள்ள எவனும் யோசனைகள் சொல்ல மாட்டான்!

பேட்டி: **அசோக் குமார்**

# அத்தியாயம் 42

''அடப்பாவி!'' என்று தன்னையுமறியாமல் கூவி விட்டாள் நித்யா. சட்டென்று அடி உதட்டை உள்ளுக் கிழுத்துக் கடித்துக் கொள்ளவும் செய்தாள். ஆனந்த் செய்தது மாபாதகமான செயல் என்பதில் அவளுக்குச் சந்தேகமில்லை. அதை அவன் வாயாலேயே கூறக் கேட்டதால் அதில் ஐயப்பாட்டுக்கும் இடமில்லை. 'அடப்பாவி' என்று வைததால் தனக்கு என்ன நேருமோ என்ற பயமும் அவளுக்கு இல்லை. இந்தத் தொழிலில் எந்த விளைவையும் எதற்கும் தயாராக இருக்க வேண்டும்தான். இப்போது அவளுக்குக் கவலையெல்லாம், தான் வைததன் காரணமாக ஆனந்த் எச்சரிக்கை அடைந்து தன்னிடம் பேசுவதைத் தவிர்த்து விடாதிருக்க வேண்டுமே என்பது தான். அப்புறம் தன்னால் முழு விவரங்களும் தெரிந்து கொள்ள முடியாமல் போய்விடும் அல்லவா?

நல்லவேளை, குடித்திருந்ததால் அவனுக்கு அவளை அப்போது கோபித்துக் கொள்ளத் தோன்றவில்லை. அவள் வைததைச் சிரித்த படியே ஏற்றுக் கொண்டு, ''பாவமாவது, புண்ணியமாவது? பாவ புண்ணியங்களுக்கு நீயும் நானும் என்னைக்கு அஞ்சினோம்?'' என்று கேட்டான்.

''அது சரி, கொலைபண்ணச் சொல்லி நீங்க தூண்டினால் ராஜசேகர் உடனே சரின்னு சம்மதிச்சுட்டானா? தூக்குத் தண்டனை என்கிற பயம் அவனுக்கு இல்லையா?''

''பணம் எதையும் சாதிக்கும் நித்யா! உனக்குத் தெரியாததா இது?''

நித்யா தனக்கும் ஒரு டிரிங்க் தயாரித்துக் கொண்டாள். அவனுடன் சேர்ந்து தானும் குடிக்கும் போதுதான் — ஒரு பெண்ணும் தன்னுடன் சேர்ந்து மது அருந்துகிறாள் என்னும்போது — அவனுக்குக் குஷி பிறக்கும். நாத் தளரும்!

''அந்தக் கம்பெனியிலேயே ரொம்ப முரடன் யாருன்னு விசாரிச்சேன்'' என்று ஆனந்த் சொல்லிக் கொண்டு போனான். ''ராஜசேகர்னு தெரிய வந்தது. அவனை ரகசியமாக் கூப்பிட்டு அனுப்பினேன்...''

தன் திறமையில் பெருமையுற்று அவன் கூறிக் கொண்டே போனான். அவளும் அவனுக்கு நம்பிக்கை பிறக்குமளவுக்கு நெருங்கி அமர்ந்தாள். ஆனால் அவள் சிந்தனை வேறு விஷயத்தில் திசை திரும்பி விடாத அளவில் எட்டவும் இருந்தாள். 'எப்படியாவது முழு

## மும்முனைகள்

கி.ராஜேந்திரன்



விவரங்களையும் தெரிந்து கொண்டுவிட வேண்டும்!'

"'ராஜசேகர்! இருபதாயிரம் ரூபாய் சம்பாதிக்க ஆசையா?' என்று கேட்டேன். வாயைப் பிளந்தான். 'நீ செய்ய வேண்டியதெல்லாம் இதுதான்! சத்யா ஆபீஸ் விட்டுக் கிளம்பி வீடு திரும்பக் காரில் ஏறியதும் நீ கேரோ பண்ணுகிற மாதிரி உன் சகாக்களையும் தூண்டி விட்டு இழுத்துக்கிட்டுப்போ. அவர்கள் உணர்ச்சி வசப்படுகிற மாதிரிப் பேசு. எல்லாரும் காரைச் சூழ்ந்து கோஷம் போடுங்க. நீ நாலு தரம் ஒழிக கோஷத்துக்காக வாசகத்தை எடுத்துக் கொடுத்த பிறகு, சத்யாவின் கார் ஜன்னலருகில் நின்று, 'ஏண்டா மருந்து தயாரிப்பு கம்பெனி நடத்தறே? விபசார விடுதி நடத்தப் போறது தானே? கூத்தியைக் கொண்டு வந்து ஆபீஸிலே வைச்சுக்கிட்டுக் கூத்தடிக்கிறியே'ன்னு கேளு! அவன் கோபமடைந்து உன்னைத் தாக்க வருவான். இரண்டு தடவை அவன் அடிக்கவோ உதைக்கவோ செய்கிற வரை பல்லைக் கடிச்சுக்கிட்டுச் சும்மா இரு. எதிர்க்காதே. அப்புறமா ஆத்திரம் அளவு மீறியது போல் காட்டிக்கிட்டு இடுப்பில் மறைத்து வைத்திருக்கும் கத்தியை எடுத்துக் குத்திடு. அப்போ தற்காப்புக்காகவும் அளவு மீறி ஆத்திர மூட்டப் பட்டதாலும் நீ குத்தினேன்னு ஏற்படுமே தவிர கொலைக் குற்றமாகாது. கெட்டிக்கார வக்கீலை வைத்து வாதாடி, ஐந்து அல்லது ஆறு வருஷ சிறைத் தண்டனைக்கு மேல் போகாமல் நான் கவனிச்சுக்கறேன். உன்



பேரிலே பாங்கில் இருபதாயிரம் ரூபாய் கட்டறேன். ஐந்து வருஷங்கள் கழிச்சு வட்டியோடு வாங்கிக்கலாம். பிக்ஸட் ரசீதை இப்பவே உன்னிடம் தருகிறேன். பத்திரப் படுத்திட்டுப் போ. நீ திரும்பிவர வரைக்கும் உன் பெண்டாட்டி குழந்தைங்க கஷ்டப்படாதிருக்க அவங்களுக்கு மாதா மாதம் இருநூறு ரூபாய் தரேன். நீ ஆறு வருஷங்கள் தொடர்ந்து வேலை செய்து சம்பளம் வாங்கினாலும் இருபதாயிரம் ரூபாய் கலையாகக் கண்ணால் பார்க்க முடியுமா? யோசி!'

''இப்படி நான் பேசியதும் அவன் அசந்துட்டான். சரின்னு என் திட்டத்துக்கு ஒப்புக் கொண்டான். நான் எதிர்பார்த்ததற்கு அதிகமாகவே நடந்தது. சத்யா வெறும் கையால் ராஜசேகரைத் தாக்கப் போகலே, ஷூவைக் கழற்றி அடிச்சான். ராஜசேகர் கீழே விழுந்தது போல் நடிக்க, சத்யா தைரியமடைந்து மற்றொரு ஷூவை அணிந்திருந்த வலது காலால் எட்டி உதைத்தான். இது போதாதா ராஜசேகருக்கு? ஆத்திரமடைந்தவனாகக் கத்தியை உருவிக் குத்தியிருக்கான்.



அடுத்த இதழில்
உங்களுக்குப்
பலப்பல
அதிசயங்கள்
காத்திருக்கின்றன!



ஆனா மடையன், கத்தியைச் சரியான இடத்தில் பாய்ச்சாமல் விட்டு விட்டான். இருதயம், நுரையீரல், இரைப்பை போன்ற உறுப்புக்களைத் தாக்கலே. கத்தி ஆழமாகவும் பாயலே. சத்யாவுக்கு உயிராபத்து நேராமல் போயிடுச்சு. பிழைச்சுட்டான் பாவி. செத்திருந்தால் என் நெஞ்சு குளிர்ந்திருக்கும். இப்போ என் இருபதாயிரம் ரூபாய்த் திட்டம் பாழ்.''

மது தலைக்கேறியதால் நாத்தளர்ந்து பேசிக் கொண்டிருந்தான் ஆனந்த். அதற்கு அனுசரணையாக நித்யா அவனது கழுத்தும் தோளும் இணையும் இடத்திலும் நெற்றியிலும் கரங்களைப் பதித்து அனுபவ ஆற்றலுடன் மஸாஜ் செய்து கொண்டிருந்தாள். லோஷன் மணம் மதுவின் நெடியையும் அமுக்கியது.

''சத்யாவும் நீங்களும் நெருங்கிய நண்பர்களாகக் கட்டிப் புரண்ட காலம் உண்டு. அப்புறம் அவனைப் படிப்படியாகக் கெடுத்துப் பாழாக்கினீங்க. நல்லவனைக் கெடுப்பதிலேயே ஓர் ஆனந்தம் இருப்பதாகவும் சொன்னீங்க. அதெல்லாம் சரி. ஆனா இப்போ அவன் உயிரையே பறிக்கும் படியான அவசியம் என்ன நேர்ந்தது?'' இந்த ஜென்மப்பகை ஏன் — எப்படி உருவாச்சு?''

''எனக்கு அவன் பேரிலே விரோதம் இல்லே, நித்யா! அவன் காதலி பிரமீளாவைப் பழி வாங்கணும்கிற ஒரே நோக்கம்தான்! அவள் காதலனைக் கொல்வதை விட அவளைப் பழி வாங்கச் சிறந்த மார்க்கம் வேறு என்ன இருக்கு?''

''பிங்கியா? அவள் உங்களுக்கு என்ன தீங்கு செய்தாள்?''

''என் ஆசைக்கு அடிமையாக மறுத்தா!''

''அதுக்காக? ஊரில் இருக்கிற பெண்கள் எல்லாரும் மயங்குகிற அளவுக்கு நீங்க என்ன மன்மதன்னு நினைப்பா?''

''எங்கிட்டே மயங்காட்டா பாதகம் இல்லே. என் ஆசையை நான் வெளியிட்டதும், 'நான் அந்த மாதிரிப் பெண் இல்லே, என்னை ரொம்ப மட்டமா எடை போட்டுட் டீங்க ஐ டோண்ட் கேர் டு கோ டு பெட் வித் யூ' என்று கௌரவமாச் சொல்லிட்டுப் போகலாமில்லையா? என்னை அவமானப் படுத்துவானேன்?''

''என்ன! பிங்கி உங்களை அவமானப் படுத்தினாளா? என்ன செய்தா அவ?'' என்று கேட்டாள் நித்யா. அவள் கரங்கள் அவன் தோளிலிருந்து கீழிறங்கி நெஞ்சில் அடர்ந்திருந்த ரோமங்களிடையே புகுந்து அளைந்தன. இதழ்கள் அவன் வலது காதருகே குறும்பு செய்தன.

''முதலில் என் ஆசைக்கு இணங்கியது போல் நடிச்சு அறைக்குள் அழைத்துச் சென்றாள். அங்கே திடீர்னு ஜூடோ பிடியாலே என்னைத் தரையில் விழச் செய்தா. விழுந்து கிடந்த என்னைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரிச்சா. பிறகு, நான் இனிமேல் பெண்களைக் கற்பழிக்க முயல மாட்டேன்னு என்னையே எழுதச் செய்தா. அதை நானே என் மார்பில் செல்லோ டேப் போட்டு ஒட்டிக் கொள்ள வைச்சா. என் கை கால்களைக் கட்டிப் போட்டுட்டு என் கார் சாவியையும் காரையும் எடுத்துக்கிட்டுப் போயிட்டா. பெண்ணா அவ? ராட்சசி!

''மூணு மணி நேர அவஸ்தைக்குப் பிறகு என்னை ஓட்டல் பையன் ஒருவன் வந்து விடுவிச்சான். பெரிசா சிரிக்க ஆரம்பிச்சவன் என் கோபத்தைப் பார்த்து விட்டு அடங்கினான். 'இதை யாரிடமும் வெளியிடாதே'ன்னு கூறிப் பத்து ரூபாய் பணம் தந்தேன். அதை வாங்கிக்கிட்டான். ஆனால் அவனால் இந்தச் சுவையான செய்தியை நாலு பேரிடம் பரப்பாமல் இருக்க முடியவில்லை. ஹோட்டலைச் சேர்ந்த எல்லாரும் என்னை ஒரு மாதிரி பார்த்து நடந்து கொண்டதிலிருந்து என்னால் இதை ஊகிக்க முடிந்தது. அறை வாடகையைக் கொடுத்து விட்டு பஸ் ஏறி மகாபலி புரத்திலிருந்து சென்னை வர வேண்டியதாயிற்று.

''இந்த அவமானத்துக்குக் காரணமான பிரமீளாவையே நான் அழிச்சுடலாம். ஆனா

# கட்டுமானப் பணிகளில் நாங்கள் வரலாறு படைக்கிறோம்

ராக்ஃபோர்ட் சிமெண்ட், தனது
பழமை வாய்ந்த தனிச்சிறப்புத் திறனில்,
மிக உன்னதமான—விரிவான, உறுதியும்
வலுவும் பெற்று விளங்குகிறது.—காலத்தின்
வேகத்தில் ஏற்படும் அழிவுகள்
அனைத்துக்கும் ஈடுகொடுக்க வல்ல,
ஒருங்கிணைப்பான உறுதி பெற்றிருக்கிறது.

ராக்ஃபோர்ட்—ஈடு இணையற்ற தனிச்சிறப்பின்,
ஒரு தனி மரபு தொன்றுதொட்டு வரும்

**டால்மியா சிமெண்ட் (பாரத்) லிமிடெட்**

ஒர்க்ஸ்: டால்மியாபுரம்-621651 (தமிழ்நாடு)
தலைமையகம்: ஹன்ஸாலயா (11, 12ம் மாடி),
15, பாரகம்பா ரோட், புது தில்லி-110001.



# உங்களுடைய அன்றாட அலுவல்களை மறுபடியும் துவக்க வேண்டுமா?

# க்ளாக்ஸோஸ்-D®

## களைப்புடன் போராடி உங்களுக்கு உடனடி சக்தியைத் தருகிறது.

க்ளாக்ஸோஸ்-டி சாப்பிட்டால் வீட்டு வேலைகளைத் துவக்க நீங்கள் தயாராகி விடுகிறீர்கள். க்ளாக்ஸோஸ்-டி உங்கள் உடலுக்குத் தேவையான இன்றியமையாத சக்தியைத் தருகிறது. டாக்டர்களால் சிபாரிசு செய்யப்படும் க்ளாக்ஸோஸ்-டி வைடமின் டி, கால்ஷியம் மற்றும் ஃபாஸ்ஃபரஸ் யாவும் செறிந்துள்ள உயர் தரமான க்ளூகோஸ்.

க்ளாக்ஸோஸ்-டி களைப்பைப் போக்கி மீண்டும் வீட்டு வேலைகளைச் சமாளிக்கும் சக்தியை உங்களுக்குத் தருகிறது.

**க்ளாக்ஸோஸ்-D®**

**குடும்பத்தினருக்கு உடனடி சக்தி.**



dCa GL 54 TAM R

அவனுக்கு அந்தத் தண்டனை போதாது. மரணம் நிம்மதியைத் தேடித் தந்துடும். ஆனால் சத்யாவைக் கொன்னுட்டா அவள் வாழ்நாள் முழுவதும் காதலனின் நினைவு பேயுருவமாக அவளைச் சூழ்ந்து துன்புறுத்திக் கொண்டேயிருக்கும். நானும் அவளை நன்றாகக் குத்திக் காட்டிப் புண்படுத்தலாம். ஆனா அந்தத் தடியன் சத்யா என் ஆசையில் மண்ணைப் போட்டுட்டு உயிர் பிழைச்சுட்டான். எனக்கு இருபதாயிரம் ரூபாயும் அது தவிர மாசம் இருநூறு ரூபாய் வீதம் ஐந்து வருஷத்துக்கு இன்னொரு பன்னிரண்டாயிரமும் நஷ்டம். வக்கீல் வச்சு ராஜசேகருக்காக நான் பின்னணியில் இருந்து கொண்டு வாதாடணும். அதுக்கு வேறே செலவு. பட்டது போதும்னு இப்போ பின் வாங்க முடியாது. அந்தப் பய ராஜசேகர் உண்மையைப் போலீஸில் வெளிவிட்டு விடுவான். பாங்கு ஃபிக்ஸட் டெபாசிட் ரசீதே சாட்சியமா மாறிடும்!''

சதித்திட்டம் பற்றியும் அது முழுமையாக நிறைவேறாது போன விதத்தையும் அறிந்து கொண்டதால் ஏற்பட்ட வியப்பும் திகைப்பும் ஒருவாறு அடங்கியதும் திடீரென்று நினைத்துக் கொண்டவள் போல் நித்யா சிரித்தாள்.

''எதுக்கு சிரிக்கிறே?'' என்றான் ஆனந்த்.

நித்யாவின் தலைவிதி அப்போது செயல்பட்டது. அவள் நாவில் சனி புகுந்து கொண்டது. ''நீங்க கையும் காலும் கட்டிப் போடப்பட்ட நிலையில் முக்கால் நிர்வாணமாகக் காட்சி தந்ததை நினைத்துக் கொண்டேன்! மார்பிலே ஒட்டப்பட்ட, 'இனி கற்பழிக்க முயல மாட்டேன்' என்ற அறிவிப்பு வேறு! அதை எண்ணிப் பார்க்கும் போதே எனக்கு இவ்வளவு சிரிப்பு வருகிறதே, அந்த ஓட்டல் காரங்க சிரிப்பை அடக்கிக் கொள்ள ரொம்பத்தான் கஷ்டப்பட்டிருப்பாங்க!'' என்று கூறி மறுபடியும் சிரித்தாள் நித்யா.

கோபத்தில் ஆனந்தின் கண்கள் சிவந்தன. ''தடிச் சிறுக்கி!'' என்று வைதபடி அவளைப் பற்றி முன்னால் வருமாறு இழுத்தான். ''உனக்கும் திமிர் ஏறிப் போச்சா? சிரிக்கிறியா என்னைப் பார்த்து! அந்தக் கழுதை பிங்கி தான் சிரிச்சான்னு உனக்கு எங்கேயிருந்துடி இவ்வளவு தைரியம் வந்தது? நான் போடற பிச்சையை வாங்கிக்கிட்டு என் காலடியில் விழுந்து கிடக்க வேண்டியவள் நீ. சிரிக்கிறியா?'' என்று கேட்டபடியே அவள் கன்னங்களில் 'பளார் பளார்' என்று மாறி மாறி அடித்தான். ஒவ்வொரு கேள்விக்கும் இரண்டு இரண்டு அடிகள் கன்னங்களில் விழ, வேதனையுடன் ரோஷமும் பொங்கியது நித்யாவுக்கு.

''இந்தாங்க! நான் மட்டமான தொழிலிலேதான் ஈடுபட்டிருக்கேன். அதற்காக நான் வருத்தப்படாத நாள் கிடையாது. வயத்துப் பிழைப்புக்கு எனக்கு இது தவிர வேறு வழி தோணலே. இறங்கிட்டேன். ஆனா இதனாலே நான் அடியோடு சுய மரியாதை இழந்துட்டதா அர்த்தமில்லே. என்னை அடிக்க உங்களுக்கு என்ன உரிமை?'' என்று சீறினாள்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''விஷயம் தெரியாத தொழிலை எவனும் மேற்கொள்வதில்லை — அது எவ்வளவு சிறிய தொழிலானாலும்! ஆனால், எல்லாவற்றையும் விட மிக கஷ்டமான தொழிலை, எல்லோருமே தாங்கள் தகுதி படைத்தவர் என்று எண்ணி மேற்கொள்கிறார்கள் — அதுதான் அரசாங்கத்தை ஆள்வது!'' — சாக்ரடீஸ்,-சம்பத் குமார்

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''அப்படித்தான் அடிப்பேன்! வேசிங்களெல்லாம் கூட உமன்ஸ் லிபரேஷன் பேசறீங்களா? உனக்கு என்னடி? சுயமரியாதையும் கௌரவமும்?'' என்று ஏசிய ஆனந்த் அவள் கேசத்தைப் பற்றி இழுத்தான். போதையில் சிவந்ததைவிடப் பன்மடங்கு அதிகமாக ஆத்திரத்தில் சிவந்த கண்களுடன் அவளைத் தாறுமாறாக அடிக்க ஆரம்பித்தான். தலையிலும் வயிற்றிலும் முதுகிலும் நெஞ்சிலும் குரூரமான ஆனந்தத்துடன் குத்திச் சித்திரவதை செய்தான். ''அந்தப் பிரமீளாவையும் இதே மாதிரிதான் ஒருநாள் அடித்து நொறுக்கப் போகிறேன்'' என்று சொல்லிச் சொல்லி அடித்தான். ரொம்ப நேரத்துக்குப் பிறகு அவன் கரம் களைத்து ஓய்ந்தது. சிகரெட் ஒன்று எடுத்து உதட்டில் வைத்துக் கொண்டான். ''இது எதுக்குத் தெரியுமா? உனக்குச் சூடு போடப் போறேன்! ஜாக்கெட் பிரா எல்லாம் கழற்று!'' என்று உத்தரவிட்டான்.

தப்ப முடியாது என்று நித்யாவுக்குத் தெரிந்தது. அபார்ட்மெண்டின் வாசல் கதவு பூட்டிச் சாவி அவனது டிரெஸ்ஸர் பைக்குள் இருந்தது. போராடி வென்று தப்பி ஓடவெல்லாம் அவள் உடலில் சக்தியுமில்லை.

மூச்சிரைக்க, வேதனை தாங்காது நின்ற அவள், மருண்ட பார்வையை இங்குமங்குமாகச் செலுத்திய போது அம்மன் சிலை அவள் கண்களில் பட்டது. நல்ல வெண்கலச் சிலை, அழகிய சிலை, கனமான சிலை. ''ஏண்டி பெண்ணே தவிக்கிறே? நான் இருக்கிறேனே, அபயமளிக்க'' என்று அம்மன் சொல்கிற மாதிரி அவளுக்குத் தோன்றியது. அடுத்த கணம் — அவன் சிகரெட் பற்ற வைப்பதில் முனைந்திருந்த அந்த ஓரிரு வினாடிகளில் — தாவி அந்தச் சிலையைத் தலையைப் பற்றித் தூக்கி வீசினாள். 'ணங்'கென்று அவன் தலையின் பின்புறத்தைச் சிலையின் அடிவாரம் தாக்குவதை அவள் இரு கரங்களும் உணர்ந்தன. எலும்பு முறிகிற ஓசையும் தெளிவாகக் கேட்டது. அவன் தடாலென்று கீழே விழுந்தான். அவன் உடலுக்கடியில் நெருப்புக் குச்சி சிக்கித் தீ அணைந்தது. அப்புறமும் அவளுக்கு ஆத்திரம் தீரவில்லை. ஆவேசத்தோடு அவன் தலையிலும் முதுகிலும் மீண்டும் சிலையின் அடிப்பகுதியால் தாக்கினாள். தன் செயலின் பயங்கரத்தைப் புரிந்து கொள்ள அவளுக்கே நீண்ட நேரமாயிற்று!

(தொடரும்)

# Kalki Shopping Page

ஸ்ரீ ராஜேஸ்வரி ஹால்

பட்டு

121, ராஜ வீதி
கோயமுத்தூர்-641001
போன்: 25859

உஷா
சாரி பாரடைஸ்
333, ராஜ வீதி, கோயமுத்தூர்-641001
போன்: 33369

*While others are busy talking about their TV sets, we are busy selling ours!*

## Bharat TV

*more performance than promises.*



*Available at:*
RAJA ENTERPRISES
228, T. H. Road
Madras - 600 019
Phone: 553840

Admired for beauty
Bought for performance

## Bharat TV
### Urvashi



*Available at:*
MUSEE MUSICAL
67, Mount Road
Madras - 600 002
Phone: 89380

THE BIOGRAPHY
OF
**RAJAJI**
by
**RAJMOHAN GANDHI**

PRICE Rs. 45/-
(Postage Rs. 3/- extra)



BHARATHAN PUBLICATIONS
PRIVATE LIMITED
Guindy, Madras-600 032

How to buy the best TV in town? Read other TV advertisements.

Then come and see ours 'live'!

**Bharat TV**



*Available at:*

VIJAYAS
37, First Main Road,
Gandhi Nagar, Adyar
Madras-600 020
Phone: 74579

Admired for beauty
Bought for performance

**Bharat TV**
**Urvashi**



*Available at:*

PARAM AGENCIES
93/3, Peters Road
Madras - 600 014
Phone: 812577

ACIL BT



**THE UNIFORM VOICE OF THE SEASON**

**Wide range of BINNY Uniform fabrics Casement, Khaki drill, and white shirtings**

**SHOWROOM I**
**Exclusive for Binnys**
**SHOWROOM II**
**BASEMENT SHOWROOM** (Airconditioned)



**VENKATESH VASTRALAYA P. LTD**
State Bank of Mysore Bldg.
Opp. High Court,
MADRAS-600 001, Phone: 20201.

PAM VVP 1081

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 12. பாகப்பிரிவினை

சிங்காரம் மத்தியானம் சாப்பிட வருகிற வரை அவ்வையாரம்மாள் போவதாகக் காணோம். கோதையிடம் பேசிக்கொண்டிருக்கும் போதே, வாசற்பக்கம் காலடிச் சத்தம் கேட்கும் போதெல்லாம் கிழவியின் கண்கள் சிங்காரத்தைத் தேடிப் பரபரத்தன.

சிங்காரம் பாத ரட்சைகளின் சப்தமெழப் படியேறி வந்தான். நடையில் அவற்றைக் கழற்றி விட்டுக் கூடத்துக்கு வந்து ஊஞ்சல் பலகையில் உட்கார்ந்த பிறகுதான் கூடத்துச் சுவரோரமாய்ச் சம்மணமிட்டு உட்கார்ந்திருக்கும் அவ்வையாரம்மாளைப் பார்த்தான். இதுவரை அவனுக்காகக் காத்திருந்த கிழவி இப்போதுதான் ரொம்ப பக்தி சிரத்தையுடன் கண்களை மூடிக்கொண்டு 'சிவாயநம' ஜெபித்தாள். சற்றுநேரம் உதடுகள் அசையப் படபடவென்று சிவநாமாவளி செய்தபின் கண்களைத் திறந்து, ''வா அப்பா, சிங்காரம்! உன்னைப் பாத்து எவ்வளவு நாளாச்சு? கண்ணிலேயே படறதில்லியே? வேலை ரொம்ப ஜாஸ்தியோ? ஏன் முகமெல்லாம் வாட்டமாயிருக்கு...? உடம்புக்கு ஒண்ணுமில்லையே'' என்று உருகி விசாரித்தாள்.

''அதெல்லாம் ஒண்ணுமில்லே அத்தே! ... இன்னிக்கி சனிக் கிழமையில்லையா! காலையிலே எண்ணெய் தேய்ச்சுக் குளிக்கிறதுக்காக கடுக்கனை அவிழ்த்து வெச்சேன்! போட மறந்துட்டேன், அதான் முகம் வெறிச்சினு இருக்கு'' என்று சமாதானம் சொல்லிக்கொண்டே, முருகேசன் கொண்டு வந்து வைத்த வெள்ளிக் கிண்ணியிலிருந்த — காலையில் குளிக்கும் போது கழைந்து வைத்த ஆபரணங்களை எடுத்து அணிந்துகொள்ள ஆரம்பித்தான் சிங்காரம்.

காதில் கடுக்கன்கள், கழுத்தில் சங்கிலி; இரண்டு கைகளுக்கும் உரிய அரை டஜனுக்கும் மேலுள்ள மோதிரங்கள்...

''இப்பதான் சிங்காரம் பிள்ளை மாதிரி இருக்கு!'' என்று பொன்னிலும் வைரத்திலும் ஜொலித்த அவனது கோலத்தைப் பார்த்துப் பூரித்தாள் கிழவி.

''நான் ஒரு முக்கிய காரியமா உன்கிட்ட பேச வந்திருக்கேன். நம்ப அமுதுவை உனக்குத்தான்னு எல்லாரும் தீர்மானம் பண்ணியிருக்காங்க. எனக்கு அதுலே சந்தோஷமே! உனக்குச் சம்மதந்தானே?'' என்று கேட்டுச் சிங்காரத்தின் முகத்தைப் பார்த்து ஒருமுறை பொக்கை வாய் திறந்து சிரித்தாள் கிழவி.

''அதுக்கு மின்னே உங்க அண்ணன் பெரிய சாமி கிட்ட போயி நீ கேளு... எப்ப சொத்தையெல்லாம் ஒப்படைக்கப் போறேன்னு. அந்த நினைப்பே இருக்கிறதாத் தெரியலே அந்தப் பிள்ளைக்கு. ஆனால் அதை ஒண்ணும் செய்ய முடியாது — அதைப் பத்தி நீ கேக்காமலே அவரு ஒப்படைச்சுடுவாரு. அதிலே ஒரு முக்கியமான விஷயம் இருக்குது. இத்தனை வருஷமா இந்தச் சொத்திலேருந்து எவ்வளவு வருமானம் வந்திருக்கு. அதையெல்லாம் யார் யாருக்கு அள்ளி வீசி, எங்கெங்கேயெல்லாம் மருமகன் பிள்ளை வீட்டுப் பணம் திரம்பி வழியுது தெரியுமோ?... போகட்டும்னு விட்டுடாதே... உங்க அண்ணரு கிட்ட அதுக்கெல்லாம் கணக்குப் போட்டுக் கணிசமா ஒரு தொகை கேளு... நல்லதனமாவே கேளு தம்பி! நீ கேக்கப் போறது நியாயமா உனக்குச் சேர



வேண்டியதுதான்... நாளைக்குக் கல்யாண மாகி நீயும் குடும்பஸ்தனு ஆகறப்போ இப்ப மாதிரியே யாரு அள்ளிக்கிட்டுப் போனு நமக்கென்னன்னு நீ இருக்கப் படாதுன்னுதான் சொல்ல வந்தேன்... மணியாகுது சாப்பிட்டியோ இல்லியோ? நான் வரேன்'' என்று எழுந்தாள் அவ்வை யாரம்மாள்.

''இருங்க அத்தை — சாப்பிட்டுட்டுப் போங்க'' என்று வற்புறுத்தினன் சிங்காரம்.

''உனக்குத் தெரியாதா; இன்னிக்கி சனிக் கிழமை, நான் ஒரு பொழுதாச்சே! நாற்பது வருஷமா இந்த விரதம் ஒரு பழக்கமாயி டுச்சு... ஏழுமலையானே! வேங்கடாசலபதி!'' என்று உரக்கக் கூவிக் கொண்டு போனுள் கிழவி.

அவள் போன பின் சாப்பிட உட்கார்ந்த சிங்காரத்துக்குப் பெரியசாமியை இப்போதே பார்த்து எல்லாவற்றையும் தீர்த்துத் தனது சொத்துக்களுக்கான பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று மனம் பரபரத்தது. முருகேசனைக் கூப்பிட்டான்.

''பெரிய வீட்டுக்குப் போய்த் தம்பி வைத்தியை உடனே வரச் சொல்லு!'' என்று உத்தரவிட்டான்.

சிங்காரம் சாப்பிட்டு முடித்து முற்றத்தில் கைகழுவிக் கொண்டிருக்கும் போது வைத்தி வந்தான். பின்னுலேயே அவனுடைய வளர்ப்புத் தாய் காந்திமதியும் வந்து கொண்டிருந்தாள். முன்பெல்லாம் இடுப்பை விட்டு இறக்காமல் தூக்கிக் கொண்டு திரிகிற வைத்தியை அது போல இல்லா விட்டாலும் எப்போதும் கூடவே வைத்துக் கொண்டிருப்பாள் காந்திமதி. வைத்திக்குப் பதினேழு வயது முடிந்து விட்டது. அவன் பள்ளிக் கூடத்துக்குப் போகவே இல்லை. திண்ணைப் பள்ளிக் கூடத்தில் எண்ணும் எழுத்தும் கற்றுக் கொண்டான். எப்போதும் காற்றுடி விடுவது, பம்பரம் விளையாடுவது, தன் வயதொத்த தெருப் பையன்களுடன் ஊர் சுற்றுவது என்பது தவிர அவன் வேறெதிலும் நாட்டமில்லாதவனுக இருந்தான். சிங்காரம் போல் அவன் கெட்டிக் காரனுகவோ, வாய்ச் சாகசம் உடையவனுகவோ வளரவில்லை.

மேலே சட்டைகூட இல்லாமல் ஒரு துண்டைப் போர்த்திக் கொண்டு முழங்காலுக்கு மேல் உயர்த்திக் கட்டிய வேட்டியுடன் தூணருகே வந்து நின்று தலை சொறிந்துகொண்டு ''கூப்பிட்டியா அண்ணுத்தே?'' என்று பணிவாகக் கேட்டான் வைத்தி.

சிங்காரத்துக்கு இவனைத் தன் தம்பி என்ற நினைப்புடன் பார்ப்பதற்கு வருத்தமாக இருந்தது.

''ஏண்டா நீ இப்படி இருக்கே? நல்ல வேட்டி சட்டைக்குக் கூடவா உனக்கு வழியில்லாமல் இருக்கு அந்த வீட்டிலே? பெரிய அண்ணன் கிட்ட நம்ப அப்பா உயில் பிரகாரம் சொத்துக்களை நமக்கு ஒப்படைக்கணும்னு கேக்கப் போறேன். உனக்கு இன்னும் வயசாகலே — அடுத்த வருஷம் பார்த்துக் கலாம்னு அண்ணன் சொன்னல், நீ ஒத்துக்கிட்டு 'ஈ ஈ'னு பல்லைக் காட்டிப் பிட்டியானு நானும் உனக்காக ஒரு வருஷத்துக்குக் காத்துக்கிட்டுக் கெடக்கணும் — நம்ப ரெண்டு பேருக்கும் எல்லாச் சொத்துக்களையும் ஒப்படைச்சிட்டுப் பெரியவர் ஒதுங்கிக்கணும். அப்புறம் நமக்குள்ளே நாம பாகம் பிரிச்சுக் கலாம். என்ன சொல்றே?'' என்று தம்பியிடம் கேட்டான் சிங்காரம்.

தன்னை மதித்து இவ்வளவு தூரம் சிங்காரம் பேசியதில் புளகாங்கிதம் கொண்டிருந்த வைத்தி, ''அப்பிடியே ஆகட்டும், அண்ணுத்தே!, சரி அண்ணுத்தே!'' என்று தலையாட்டினன்.

சிங்காரம், தம்பியோடு பேசிக் கொண்டிருந்தவன் எழுந்து உள்ளே போய் அலமாரியைத் திறந்து, சரிகைக் கரையிட்ட வேட்டியும், தன்னுடைய பட்டுச் சட்டை ஒன்றையும் எடுத்து வந்து வைத்தியிடம் தந்து ''ஏண்டா லட்சாதிபதியாப் பிறந்தும் பிச்சைக்காரன் மாதிரி நிக்கிறே? இந்தா இதை உடுத்திக் கொள் — நாளையிலேருந்து நீ இங்கேதான் வந்து இருக்கணும். என்ன சின்னம்மா? வைத்தி என் தம்பிங்கிற விஷயமே



மறந்து போச்சா, எல்லாருக்கும்?'' என்று சொந்தத்தோடு பேசினான். உண்மையில் சிங்காரத்துக்குத் தன் தம்பியைத் தான் இதுநாள் வரை கவனியாதிருந்தது உள்ளூற உறுத்தல் தந்தது..

வைத்தி, அண்ணன் தந்த பட்டுச் சட்டையையும், சரிகை வேட்டியையும் முகத்தில் ஒற்றிக் கொண்டான். ''அப்பாடி என்ன வாசனை! செண்டு கமகமன்னு வாசம் அடிக்குது அண்ணைத்தே'' என்று பல்லெல்லாம் தெரியத் தலையைச் சொறிந்து கொண்டு சிரித்தான்.

''முருகேசா! பெரிய வீட்டுக்குப் போயி அண்ணைத்தை வந்ததும்—முக்கியமான சமாசாரமா நானும் தம்பியும் அவர் கிட்ட பேசறதுக்கு வரோம்னு சொல்லிட்டு வா, போ'' என்று வேலையாளை ஏவினான் சிங்காரம்.

(தொடரும்)

---

## செல்வம்!

உலகத்தின் ஐந்து பெரிய கோடீஸ்வரர்களுள் ஒருவரான பால்கெட்டி தம் சுயசரிதையில் எழுதுகிறார்:

''இந்த உலகத்திலுள்ள செல்வ மனைத்தையும் உலகிலுள்ள எல்லா மக்களுக்கும் குறிப்பிட்ட ஒரு நேரத்தில் சரி சமமாகப் பங்கிட்டுக் கொடுத்து விடுவதாக வைத்துக் கொள்வோம். அரை மணி நேரம் கழிந்துக் கணக்கிட்டால் அவர்களின் செல்வ நிலையில் குறிப்பிடும்படியான ஏற்றத் தாழ்வுகள் இருக்கும். சிலர் தம் செல்வத்தைச் சூதாடி இழப்பார்கள்; சிலர் ஏமாற்றப்பட்டு இழப்பார்கள்; சிலர் திருடக் கொடுத்து விட்டு நிற்பார்கள். அச்செல்வம் வேறு சிலரிடம் சேர்ந்து அவர்கள் பணம் படைத்தவராவார்கள்.

இந்த ஏற்றத் தாழ்வுகள் நேரம் செல்லச்செல்லக் கூடிக்கொண்டே போகும். மூன்று மாதங்களுக்குப் பிறகு ஏற்றத் தாழ்வுகள் வியக்கத் தக்க வகையில் வளர்ந்து விடும்.

ஒரு வருடமோ இரண்டு வருடமோ கழிந்து உலகம் மீண்டும் தன் பழைய நிலைமைக்கே திரும்பி வந்து விடும்!

இம்மாற்றத்தை ஊழ்வினை என்றோ அதிர்ஷ்டம் என்றோ, இயற்கையின் விதி என்றோ எப்படி வேண்டுமானாலும் சொல்லுங்கள். சிலர் மற்றவர்களைக் காட்டிலும் தனித்திறமையால் உயர் பட்டத்துக்குச் சென்று பிரகாசிக்கிறார்கள். - சௌமினி.




தமக்கு மிகவும் பிடித்த ஆறு நூல்களைப் பற்றித் தொழிலதிபர் பொள்ளாச்சி திரு. நா. மகாலிங்கம்:

**அருட்பா :**

இந்து சமய வளர்ச்சியில் அருட்பா மிகவும் உன்னத நிலையை உணர்த்தும் புத்தகம். மனத்துக்கு சாந்தி தரும் உயர்ந்த நூல்.

**காந்திஜியின் ''சத்தியசோதனை'' :**

தம் உள்ளத்து உணர்ச்சிகளை, பயமில்லாமல் வெளிப்படையாக இப்புத்தகத்தில் காந்தி எழுதியுள்ளார். என் மாணவப் பருவத்தின்போது இது எனக்கு வழிகாட்டியாக இருந்தது.

**தாகூர் எழுதிய ''கோரா'' :**

ஓர் ஆங்கிலேயக் குழந்தையை, இந்தியன் ஒருவன் எடுத்து வளர்ப்பதை மையமாகக் கொண்டு அழகாகப் புனையப்பட்ட கதை. நான் பி. எஸ்ஸி. படித்துக் கொண்டிருந்தபோது, ஒருநாள் காலை பத்து மணிக்குப் படிக்க ஆரம்பித்தேன். மதிய உணவு, தேநீர், இரவு உணவு எல்லாவற்றையும் மறந்து படித்துக் கொண்டிருந்தேன். அதிகாலை மூன்று மணிக்குப் படித்து முடித்தேன். புத்தகம் அவ்வளவு தூரம் என்னைக் கவர்ந்தது.

**சர்ச்சிலின் ''போர்க்காலத்து நினைவுகள்'' :**

போரைப் பற்றிப் பல நுணுக்கங்களை அறிந்தவர் சர்ச்சில் என்ற உண்மையைப் படிக்கும்போது உணர்ந்தேன். ''கல்மனிதர்'' என்ற என் எண்ணத்தை அகற்றி, அவரை எனது 'ஹீரோ' ஆக்கிய பெருமை இப்புத்தகத்துக்கு உண்டு.

**நேருவின் ''டிஸ்கவரி ஆஃப் இந்தியா'' :**

நேருவின் எழுத்துக்களிலேயே என்னை மிகவும் கவர்ந்த புத்தகம் இது. தமது கண்ணோட்டத்தில் இந்தியாவின் சிறப்பை அழகாகக் கூறுகிறார். இதில் இந்தியாவின் எதிர்காலத்துக்காகத் திட்டங்கள் தீட்டியுள்ளார். தங்கள் சுக வாழ்வுக்காகத் திட்டங்கள் தீட்டும் மற்ற அரசியல்வாதிகள் போல் இல்லாத அவரது பரந்த மனத்தை, உயர்ந்த எண்ணங்களை வியந்துள்ளேன்.

**நடராஜகுரு தொகுத்துள்ள ''கீதை'' :**

பல வெளிநாடுகளுக்குச் சென்று பல விஷயங்களையும், தத்துவங்களையும் அறிந்துள்ள ஆசிரியரின் அருமையான தொகுப்பு நூல் இது. கீதையை விட, தங்கள் சொந்த எண்ணங்களைச் சொல்லும் எழுத்தாளர்களின் நூல்களை விட, இப்புத்தகம் மாறுபட்டதான ஓர் அருமையான படைப்பு. ஒரு டஜன் புத்தகங்கள் வாங்கிப் பலருக்கு விநியோகம் செய்தேன்.

பேட்டி: ''சிக்கி''






● கையைக் கொடுங்கள் இப்படி-கொடுத்த ,மணி'க்கும் மேலாக, நான்கு 'மணி'யான சிறுகதைகளைத் தந்து ஜமாய்த்து விட்டீர்களே! பாராட்டு தல்கள். அதுசரி, 'புருட்டஸ் 79' அவர்கள் எழுதிய கதைக்கு ஏன் ''கார்த்திகா ராஜ் குமார்'' என்று பெயரிட்டார்...?!

திருவொற்றியூர். எஸ். சங்கரநாராயணன்

● கதையைவிட எழுதியவருக்கு முக்கியத்துவம் அளிக்குமளவில் எழுதியவர் பெயர் பெரிய எழுத்திலும், கதையின் பெயர் சிறிய எழுத்திலும் அச்சாகியிருப்பது புதுமையே.

பரமக்குடி நா. ஆறுமுகம்

● இந்த இதழின் முதல் சிறுகதை என்று மட்டுமே நினைத்தேன் — அது முதல்தரமான கதை என்று படித்த பின்தான் தெரிந்து கொண்டேன் —''புருட்டஸ் 79''.

உதகை பிரதீபா ஜெயச்சந்திரன்.

● ''ரோசாப்பூ ரவிக்கைக்காரி'' படவிமரிசனம் கண்டேன். நீர் ஒருவராவது அந்தப் படம் ''பரசங்கத கன்டதிம்மா'' என்ற கன்னடப் படத்தின் அப்பட்டமான காப்பி என்பதை எழுதுவீர் என்று எதிர்பார்த்தேன். எழுதி விட்டீர்! நன்றி.

பு. தலையூர் ராதா தண்டபாணி

● ''எம். ஜி. ஆருக்கு இரட்டை மாலை'', கண்ணதாசனின், ''நீதி கேட்கிறேன்'' ஆகிய இரண்டுக்கும் ''இரட்டைப் பாராட்டு''.

அரகண்ட நல்லூர் வை. காமராக

● நான் கூட எம். ஜி. ஆர் தான் இந்திராவைக் காலை வாரி விட்டார் என்ற நம்பிக் கொண்டிருக்கையில் சரியான முறையில் அவர் நிலையைப் பாராட்டி, இந்திராவின் நிலையை விளக்கியுள்ள கல்கியே உன்னை எவ்வளவு வேண்டுமானாலும் பாராட்டலாம். கல்கியின் பார்வை தனியானது. தரமானது.

திருச்சி—14. கஸ்தூரி நாதனும் நண்பர்களும்

● கேழ்வரகிலே நெய் ஒழுகிறது என்று கூறினால் கேட்பவர்கள் நம்பி விடுவார்கள் என்று எண்ணி விட்டார் போலும் இந்திரா. தான் தஞ்சைத் தேர்தலில் நிற்காமல் தோற்றுப் போனதை, எம். ஜி. ஆரைக் கருவியாகப் பயன்படுத்தி, மொரார்ஜியின் மீது களங்கத்தைச் சுமத்துகிறார். இது இந்திராவின் வழக்கமான ராஜ தந்திரமே. இதை நிச்சயம் தமிழக மக்கள் அறிலும் குறிப்பாகத் தஞ்சை மக்கள் புரிந்து கொள்வர். இதற்கு விடையாகத் தஞ்சைத் தேர்தலின் முடிவு இருக்கும் என்பதில் ஐயம் சிறிதுமில்லை.

விருத்தாசலம் எம். ஏ. அப்துல்காதர்

● தலையங்கத்தில் விவேகம், வீரம், நயம், நடுநாயகம் இருந்தது.

''சரியான சமயத்தில் எடுக்கப்பட்ட முடிவாக இல்லா விட்டாலும் சரியான முடிவு'' என்ற வரியும் ''தொழிற் சங்க வாதிகள் போல் வீதிக்கு வந்து போராடுவது...'' என்ற வரியும் நாலுக்கு. சிறப்பான — தைரியமான — எல்லாவற்றையும் விடச் சாதுரியமான தலையங்கங்களில் இதுவுமொன்று.

சேலம் பி. பி. சம்பத்

● சென்னையில் இருக்கிறவர்களிடம் மாத்திரம் புதிய நூல்களைக் கொடுத்து, அவை பற்றிய அவர்களின் விமரிசனத்தை வெளியிடுகின்றீர்களே? ஏன் சார், தபால் மூலமாக என்னைப் போன்ற ஆர்வம் மிக்க தங்களின் வாசகர்களுக்கும்புதிய நூல்களை அனுப்பிஅவர்களின் விமரிசனம் கருத்துக்களை எழுதி வாங்கி ஏன் பிரசுரிக்கக் கூடாது?

கோட்டூர்புரம். என். ரங்கசாமி.

● தங்கள் பத்திரிகையைப் போன்றே தாங்கள் அளித்த ஜாய்டாய் டார்ச் பரிசும் உயர்வானதாக இருக்கக் கண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். பக்கத்துக்குப் பக்கம் பயனுள்ள, தரமான, பல சுவையான விஷயங்களையும், கதை, கட்டுரைகளையும் தாங்கி உலாவரும் தங்கள் பத்திரிகையின் சந்தாதாரராக இருப்பதில் பெருமைப்படுகிறோம்.

செல்வி ரஞ்சனிராஜன்.
செல்வி மாலதிராஜன்.

● ''அடுத்த பிறவியிலாவது நாங்களும் பசுக்களாகப் பிறக்க வேண்டும்'' என்று ஏழைகள் பிரார்த்திப்பது போன்று மேற்கு வங்காளப் பத்திரிகையில் ஒரு கார்ட்டூன் வெளியாகியிருக்கிறது. தினமலர் திருச்சி பதிப்பு அதே கார்ட்டூனைத் தாங்கி வெளிவந்திருக்கிறது. சுதந்திரம் அடைந்த நமது இந்தியப் பெருநாட்டில் ஏழைகளுக்கு இப்படி ஒரு நிலையா?

திருச்சி நாராயணன்.

● நான் மும்முனைகள் தொடர்கதையை முதல் அத்தியாயத்திலிருந்து படித்து வருகிறேன். இந்தக் கதையோடு நான் ஒன்றியது போல, வேறு எந்தக் கதையோடும் ஒன்றிய தில்லை.

சென்னை—17 மயிலை ஸ்ரீதரன்

# கனவா - நிஜமா? 25

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்









அன்று சிறைச்சாலை
யிலிருந்து எனக்கு
விடுதலையளித்து—'உன்
னால் முடியுமானால் நீ
கண்ட கனவுப்படி நடக்
காமல் செய்'—என்று
கூறி அனுப்பினீர்கள்
என்னை. நான் கண்டது
கனவானாலும் அதை
அலட்சியமாக ஒதுக்க
என் மனம் இடம் தர
வில்லை. கண்ட கனவு
அப்படியே நடக்கா
விட்டாலும் சிற்சில
சம்பவங்கள் அதே
போல நடந்தன....

அந்த அப்பாவி நீலன்தானா இன்றைய மன்னர் அநாமதேயர்? நம்பமுடியவில்லையே!

என்னுள் உறுதியும் வளர்ந்
தது. நிகழப் போகும் விபரீதத்தி
லிருந்து இந்நாட்டைக் காப்பாற்
றவே விதி என்னைத் தேர்ந்தெடுத்
துக் கனவாகக் காட்டி இருக்கி
றதென்ற முடிவுக்கு வந்தேன்.
நீலனுக்கு மறுபடி இங்கே வந்தால்
ஆபத்து என்பதை அறிந்தேன்.
பல்வேறு போர்க்கலைகளில்
தேர்ச்சி பெற்றுப் புதியவனாக,
மலைவாசியாக, நாடு திரும்பி
னேன். மாயப்பாறையைப் பிளக்
கும் வல்லமையையும் எனக்
களித்து மன்னனாகவும்
ஆக்கியது
விதி...

நம்ப முடியாததை இன்னும்
எவ்வளவோ இருக்கிறது இளவரசே.
இன்னும் என் கடமை முடியவில்லை.
துரோகியாகி வஜ்ராதிருடன் சேர்ந்து
விட்ட தந்தவக்ரன், இந்தப் போரில்
என் வாளுக்குத் தப்பிவிட்டான்.
அவனைப் பிடித்து வந்து மாயாபுரியின்
இருள் சிறையில் அடைக்கும் வரை
எனக்கு ஓய்வில்லை. இந்நாட்டுக்கும்
பத்திரமில்லை. அதற்கான பயணத்தை
மேற்கொள்ளுமுன் நீலனை திருத்திய
மன்னரைப் பார்த்து விடை பெறவே,
இந்த நள்ளிரவில் இங்கு வந்தேன்.
இனி அரண்மனையில்
எனக்கு வேலை
இல்லை. நான்
வருகிறேன்.

அரசே... தனியாகவா?

உங்கள் அரசர்
நானல்ல. நாடு
திரும்பிவிட்ட
வஜ்ரபாகு
அவர்கள்தான்.
நான் மக்களிடம்
மரியாதையைப்
பெறலாம். ஆனால்
மதிப்பைப்பெற
முடியாது. நான்
தனியாகத்தான்
வந்தேன். தனியா
கவே திரும்பு
கிறேன். நான் கண்ட
கெட்ட கனவு நன
வாகாமல் மன்னரைக்
காப்பாற்றிவிட்ட
மகிழ்ச்சியோடு
போகிறேன்.

நீலரே, இந்த
நாடும் நாங்களும்
உங்களுக்குக்
கடமைப்பட்டிருக்
கிறோம். எவ்வளவு
தந்தவக்ரர்கள்
இருந்தாலும்
உங்களைப்போன்ற
விசுவாசமிக்க
ஒரே ஒரு நீலர்
இருந்தாலே
போதும். விரை
வில் உங்களை
வரவேற்கக்
காத்திருக்கி
றோம்.

(முற்றும்)



# சிறப்புப்பணி!
# அமோக வரவேற்பு!

உங்களுக்கு பல்வேறு துறைகளில் பணியாற்ற லக்ஷ்மி விலாஸ் பாங்க் உங்களிடையே திகழுகிறது. உங்களது சேமிப்புகளைத் திரட்டி பாதுகாப்பதற்கும், உங்களது வளர்ச்சிக்கான தேவைகளுக்கு கடன் வழங்கவும் செயல்படுகிறோம்.

மிகப்பரவலானதும், நவீனமானதுமான பாங்கிங் வசதிகளை வழங்க வசதியும், வாய்ப்பும் பெற்றுள்ளது லக்ஷ்மி விலாஸ் பாங்க்.

## உங்களுக்கு உற்ற நண்பன்!

மரபும், புகழும் பெற்ற ஒரு பாங்குடன் நீங்கள் தொடர்பு கொண்டுள்ளது பற்றி அறிவீர்கள். உங்களது வியாபார வளர்ச்சிக்கும், சொந்த கௌரவத்துக்கும் எங்கள் இணைப்பு உங்களுக்கு ஒரு மகிழ்ச்சிக்குறி.

## பற்பல சேமிப்புத் திட்டங்கள்

சேமிப்பு வசதிகளுக்கு ஏற்ற பல்வேறு சேமிப்புத் திட்டங்களை லக்ஷ்மி விலாஸ் பாங்க் வழங்குகிறது. சம்பளம் பெறும் நபராயினும், வியாபாரியாயினும், தொழில் புரிபவராயினும், விவசாயியாயினும், தொழிலாளியாயினும், மாணவராயினும் அல்லது ஒரு குடும்பத் தலைவியாயினும் உங்களுக்குகந்த சேமிப்புத் திட்டங்கள் உள்ளன. சேமிப்புகளை முதலீடு செய்ய பாதுகாப்பான மற்றும் இலாபகரமான வழியை நீங்கள் தேடினால், அதற்கேற்ற சரியான பாங்க் லக்ஷ்மி விலாஸ் பாங்க்.




# லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர் 639 001
நிர்வாக அலுவலகம் : சென்னை 600 086

மணி ஆலை — ஜெனரல் மானேஜர்

என்.வி. ஸ்ரீநிவாசன் — சேர்மன்

SUSAK/LVB/517/79

"சசிலா, என்ன செய்து கொண்டிருக்கிறாய்? இன்னுமா நீ டிரஸ் செய்து கொள்ளவில்லே? நாழியாயிடுத்தே! இன்னும் நீ முகமே அலம்பிக்கல்லியே!" என்றான் சீதாராமன் அலுப்புடன்.

"இதோ, ஜெம்பியாச்சு" என்று கூறியபடி பரபரப்புடன் உள்ளே ஓடினாள் சசி.

மணி ஆக ஆகச் சீதாராமனுக்கு இருப்பே கொள்ளவில்லே. இங்கும் அங்கும் உலாவினான். நாடகத்துக்குக் கிடைத்திருந்த இலவச 'பாஸ்' வீணாய்ப் போய் விடப் போகிறதே என்று அவனுக்குக் கவலே.

கடைசியில், ஒரு மாதிரி அலங்காரங்களே முடித்துக் கொண்டு அவனுக்கு அருகில் வந்து நின்றாள், சசிலா.

அவள் அலங்காரத்தை எப்பொழுதும் அவன் பாராட்டாமல் இருக்க மாட்டான். இன்று அவளே அவன் நிமிர்ந்தும் பார்க்கவில்லே. "வா, வா, நாழியாயிடுத்து..." என்று கூறிக் கொண்டே வாசற்பக்கம் ஒரே தாவாகத் தாவினான். ஆனால் அவன் திரும்பிப் பார்த்த போது சசிலாவைக் காணோம்.

"சசிலா, சசிலா!" என்று இரைந்து கொண்டே திரும்பி வந்தான் சீதாராமன்.

"இதோ, ஒரு நிமிஷம்..." என்று கூறிக் கொண்டே சசிலா கண்ணாடிக்கு எதிரில் நின்று கொண்டு முகத்தைப் பவுடரால் 'டச்சப்' செய்து கொண்டாள்.

"சசிலா, நீ ஒண்ணொண்ணு நினேச்சுண்டு சரி பண்ணிக்க ஆரம்பிச்சயானு நாம நாடகம் பார்த்தாப்பலேதான்!" என்று சீதாராமன் அவசரப்பட்டான்.

வீட்டைப் பூட்டிக் கொண்டு இருவரும் கொஞ்ச தூரம் போனதும், சசிலா திடீர் என்று தயங்கி நின்றாள்.

"என், இன்னும் என்னத்தை மறந்துட்டே? ஒருவழியாக எல்லாத்தையும் பாத்துண்டு போய் முடிச்சுட்டு வா..."

# மறதி



ஸோமாஸ்

என்று சீதாராமன் கடுங்கோபத்துடன் சீறினன்.

''சமையலறை ஜன்னலைச் சாத்தினேனு, இல்லையா? சந்தேகமாயிருக்கு. பூனை வந்துடும். ஒரு நிமிஷத்திலே போய்ப் பார்த்துட்டு ஓடி வந்துடறேன்'' என்று சொல்லி விட்டுச் சுசீலா வீட்டைப் பார்க்க ஓடினள்.

சீதாராமன் தெருவில் நின்று கொண்டு தனியாய்த் தவித்தான். கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

நல்லவேளை சுசீலா உடனே திரும்பி விட்டாள். ஓட்டமும் நடையுமாக இருவரும் பஸ் நிற்கும் இடத்துக்குப் போனர்கள்.

ஒரு பஸ்ஸிலாவது இடம் கிடைக்க வேண்டுமே! ''ஏறாதே, ஏறாதே!'' என்ற பஸ் கண்டக்டரின் அதிகாரக் குரலுடன் பஸ்களெல்லாம் நிற்காமலே பறந்தன.

அரை மணிநேரம் ஆகியும் பஸ் கிடைக்காமல் போகவே சீதாராமன் முகம் வாடி விட்டது.

''சுசீலா! இனிமேல் இங்கே நிற்பதில் பிரயோஜனம் இல்லே. பஸ் கிடைத்து நாம் அங்கே போனலும் பாதி நாடகம் ஆகியிருக்கும். வா, வீட்டுக்குப் போகலாம். உன் மறதியினல் வந்த சங்கடந்தான் இது!'' என்று சோகம் ததும்பும் குரலில் கூறிக் கொண்டே சீதாராமன் நகர்ந்தான்.

''நான் மட்டும் வேண்டுமென்றே மறக்கிறேனு?'' என்று கூறும்போது சுசீலாவின் குரலிலும் விரிசல் கண்டது.



நண்பர்: இந்தத் தமிழ்நாடு முன்னேறுவதற்கு உண்டான வழி இதோ உங்களுடைய இந்தக் கையிலே தான் இருக்கு...!

அமைச்சர்: (பெருமையுடன்) இந்தக் கையிலா?

நண்பர்: ஆமாம். இந்தக் கையால் ஒரு கையெழுத்தை நீங்கள் ராஜினமா கடிதத்தில் போட்டால் போதும்!

—கிரிஜா மணாளன்

## தமரிக்கா

'முன்னேற்றம்' என்றதுமே நம் நினைவுக்கு வரும் நாடு அமெரிக்கா தான். அமெரிக்காவைப் போலவே, முன்னேற்றத்துக்குப் பெயர் பெற்று விளங்கிய தமரிக்கா என்ற நாட்டைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறீர்களா?

வியப்பெய்த வேண்டாம்! நம் தமிழகத்துக்குத்தான் 'தமரிக்கா' என்ற ஒரு பெயரும் இருந்திருக்கிறது! சீரும் சிறப்புமாக முன்னேற்றத்தில் கொடி கட்டிப் பறந்த நம் சங்கத் தமிழகத்தை வெளிநாட்டு நூலாசிரியர்கள் சிலர் தமரிக்கா என்று குறிப்பிட்டுள்ளார்கள்.

'பெரிப்புளுசு' என்னும் நூலின் பல பகுதிகளில் 'தம ரிக்கா' என்னும் பெயர் காணப்படுகின்றது. இந்த நூலின் பதிப்பாசிரியரான சோஃபு (Scy off) என்பவர், ''தமரிக்கா (Damirica) என்பது தமிழர் நாடு எனப் பொருள் படும். அதாவது கிறிஸ்துவின் காலத்திற்கு முன்பின்னுக உள்ள தென்பகுதித் திராவிடரை அப்பெயர் குறிக்கும்'' என்று கூறுகிறார். தாலமியும் தமிழகத்தைக் குறிப்பிடும் போது இதே பாணியில் திமிரிகே என்று கூறுகிறார்!

(ஆதாரம்: பேராசிரியர் வித்தியானந்தன் எழுதிய 'தமிழர் சால்பு')

—முத்து. தங்க ஐயப்பன்.

இருவரும் மௌனமாக வீட்டுக்கு வந்து சேர்ந்தனர். உள்ளே போனதும் சீதாராமன் மிகவும் மனச்சோர்வுடன் சட்டையைக் கழற்றினன். 'தொப்'பென்று கீழே விழுந்த மணி பர்ஸுடன் ஒரு கடிதமும் கீழே விழுந்தது.

மணி பர்ஸைக் கையில் எடுத்துக் கொண்டு சீதாராமன் கடிதத்தைப் பிரித்துப் படித்தான். நாடகத்துக்கு வந்த அனுமதிச் சீட்டுத்தான் அது.

அதைப் பார்த்ததும் சீதாராமன் திகைத்துப் போய் விட்டான். ஆமாம், அதில் நேற்றைய தேதி போட்டிருந்தால் அவன் திகைத்துப் போகாமல் என்ன செய்வான்! நல்லவேளை! சுசீலாவுக்கு இது தெரியாது. சீதாராமன் அந்த நாடகப் பாஸ் விஷயத்தை அப்படியே அமுக்கி விட்டான். எதை மறந்தாலும் கணவன் தவறுகளை மாத்திரம் இடித்துக் காட்டச் சுசீலா மறக்க மாட்டாள் என்பது அவனுக்குத் தெரியாதா என்ன?

ஆனல் சுசீலாவுக்கு ஒரே திகைப்பு. நாடகத்துக்கு என்று புறப்பட்டுப் போய்ப் பார்க்க முடியாமல் போய் விட்டது என்றல் தன் கணவன் அடிக்கடி குத்திக் காட்டுவாரே! அதைப் பற்றி அப்புறம் வாய் திறக்கவில்லையே என்று வியந்து கொண்டிருந்தாள்!

# இப்பொழுது ரசிப்பது

# நரசூஸ் காபி ராகம்!

காபிராகம் காதுக்கினிய ராகம்!
நரசூஸ் காபி நாவுக்கினிய பானம்!
நற்சுவை செறிந்தது. நறுமணம் மிக்கது.
பிரத்யேக "தெர்மலோ" முறையில் தயாரிக்கப்படுவது.

ADWAVE/NC/1009

ஜீவனுள்ள ஒரே-காபி

**நரசூஸ்**

**"தெர்மலோ" காபி**



**நரசூஸ் காபி கம்பெனி**
சேலம் 636 007.

கிளைகள்:
தமிழ்நாடெங்கும்.

அடி அப்படி ஒன்றும் பெரிதாகப் பட்டு விடவில்லை. குந்தி உட்கார்ந்து, துவைத்த துணிகளைக் குமுக்கிக் கொண்டிருந்தபோது அடிக்கடி தொட்டு இழுத்து விஷமம் செய்த குழந்தையைச் சில முறைகள் ''சும்மா இரு ரகு'' என்று எச்சரித்தும் பயனில்லாமல் போன போது, கடைசியாகப் பொறுமை இழந்துதான், வேலையை முடிக்க வேண்டுமே என்ற கவலையும் அதோடு சேர்ந்ததால், ''சொன்னா கேக்க மாட்டே?'' என்ற அதட்டலோடு முதுகில் இலேசாய் ஓர் அடி வைத்து விட்டான்.

உடனேயே மின்சாரக் கம்பியைத் தொட்டு விட்டதுபோல் அதிர்ச்சி உறைக்கக் கையை இழுத்துக் கொண்டான் வேலு. கடவுளே, என்ன செய்து விட்டான்! முதுகுத் தண்டில் சில்லென்றது. ரகுவின் முகத்தைக் கூர்ந்து கவனித்தான். வேலுவிடம் அடிவாங்கிப் பழக்கமில்லாத புதுமை ஒரு கோப வியப்பாக அந்த இரண்டு வயது முகத்தில் சிவந்து தெரிந்தது.

சொல்லி விடுவானோ?

''ரகு, ரகு...'' வேலு ஈரத் துணியை அப்படியே வைத்துவிட்டுக் கைகளைத் தன் அரை நிஜாரில் துடைத்துக் கொண்டு குழந்தையின் கையை மெல்லத் தொட்டான். ''நான் ஒண்ணும் பண்ணலே ரகு உன்னை... அடிச்சிட்டேனுக்கும்னு நினைச்சியா? சும்மா தட்டினேன், அவ்வளவுதான் நான் எங்கேனுச்சும் ரகுவை அடிப்பேனா? ரகுதான் நல்ல பிள்ளையாச்சே உன்னோட வெளையாடத்தானே வேணும்? வா, என் முதுகிலே ஏறிக்க...''

குழந்தையின் முகத்தில் இப்போது கோபம் இல்லையே? அவன் ஏன் சிரிக்கவில்லை? வேலு குனிந்து அவனை முதுகில் ஏற்றிக் கொண்டு அந்தப் பின்கட்டு முற்றத்தில் ''உப்பு மூட்ட உப்பு மூட்ட'' என்று கூவிக்கொண்டு சிறிது நேரம் இங்குமங்கும் நடந்தான். ரகு சிரிக்காமலிருந்தது ஓர் அடிவயிற்றுத் தீயாக உறைத்தாலும் அழவும்தான் இல்லையே என்ற எண்ணம் சிறிது ஆறுதலளித்தது. சொல்லிவிட மாட்டான், இல்லையா? குழந்தைகளே சட்டென்று பராக்கில் மற்றவைகளை மறந்துவிடக் கூடியவர்கள். உப்பு மூட்டை ஏறிய திருப்தியில் வேலு தந்த அடியை ரகு மறந்து விடுவான். அடியும் என்ன, பெரிய அடியா? இலேசாக ஒரு தட்டல்தான்.

அவன் இன்னும் ஒரு வாளி துணிகளைத் துவைக்க வேண்டும். தொழுவத்தில் பசுவுக்குத் தீவனம் வைத்துத் தண்ணீர் காட்டி அடுக்கடுக்காக எத்தனையோ கடமைகள் இருக்கும்போது ரகு விளையாட அழைத்தால் அவனால் எப்படிச் சம்மதிக்க முடியும்? அதனால் தொந்தரவு பொறுக்காமல் ஒரு தட்டுத் தட்டி விட்டால் அது ஒரு குற்றமாகுமா? குற்றமே இல்லை.

ரகு சொல்லிவிடுவானோ?

கடவுளே, அவன் சொல்லாமல் இருக்க வேண்டும்.

இப்போதுதான் உப்பு மூட்டை விளையாட்டு ஆடுகிறானே, இன்னுமா ரகுவுக்குக் கோபமிருக்கும்? ஊஹூம்.

''உப்பு மூட்ட; உப்பு மூட்ட யாருக்குங்க உப்பு மூட்ட வேணும்? வெல பத்து ரூ ா... ரகு, உன்னை இறக்கிடட்டுமா? வெளையாடினது போதுமில்லே?''

''ஊஹூம், போறுது...''

''எனக்கு நெறைய வேலையிருக்குது கண்ணு...''

''இன்னும் வெளையாடாட்டா அழுவேன்...'' ரகு அழவே தொடங்கி விட்டான். வேலு அவசரமாய்ப் பார்வையைக் கொல்லைக்



# அச்சம்

ஆர். சூடாமணி



உபாத்தியாயர்: பண்டைக் காலத்திய தமிழ்ப் பெண்கள் புலியை முறத்தால் அடித்து விரட்டியதாகச் சரித்திரம் கூறுகின்றது. இதிலிருந்து என்ன தெரிகிறது?

மாணவன்: பண்டைக்காலத்தில் தமிழகத்தில் செய்யப்பட்ட முறங்கள் எவ்வளவு உறுதியாக இருந்தன என்று தெரியவருகிறது சார்!

வி. ராஜலட்சுமி

கதவு வழியாக வீட்டின் உட்புறம் தென்பட்ட இடமெங்கும் ஓட்டினான்.

''அழுகாதே, அழுகாதே இன்னும் விளையாடலாம்... உப்பு மூட்ட... இயா, உப்பு மூட்ட அம்மா, உப்பு மூட்ட!''

ரகு சிரிப்புடன் அவன் கழுத்தைச் சுற்றிக் கரங்களை இன்னும் இறுக்கமாய்ப் பிணைத்துக் கொண்டான்.

வேலுவின் கண்கள் வாளித் துணிகள் மீதே இருந்தன. கீழே குமுக்கி வைத்திருந்த ஈர வேட்டியிலிருந்து சோப்பு நீர் வெளிர் நீலமாய்ச் சாக்கடையோரம் கசிந்து கொண்டிருந்தது.

''நான் அம்மாகிட்டச் சொல்லப் போகிறேன்'' என்றான் குழந்தை.

''எதை?'' கேள்வி பாய்ந்தது.

''நான் ரகு இல்லே, உப்பு மூட்டைன்னு.''

''அவ்வளவுதானே...'' வேலு தொண்டையை சரப்படுத்திக் கொண்டான்..

''நான்... நான் ஒண்ணும் உன்னே அடிக்கலே ரகு. சும்மா தட்டினேன், விளையாட்டுக்கு. தெரியுமில்லே?''

ரகு பதில் கூறாமல் தனது உப்பு மூட்டைப் பிறவியின் மகிழ்ச்சியிலேயே நிலைத்திருந்தான்.

''ஏண்டா வேலு, என்னடா இது அக்கிரமம்?'' வீட்டு எஜமானி குரல் கொடுத்துக் கொண்டே வந்தாள். ''இன்னும் ஒரு வேலையும் செய்யலே, துணியெல்லாம் பக்கெட்டில் போட்டது போட்டபடி கெடக்கு. நீ பாட்டுக்குக் குழந்தையோட விளையாடிண்டிருக்கியே ம், ம், ரகுவைக் கீழே இறக்கிட்டுப் பரபரன்னு உன் வேலைகளைக் கவனி. தொழுவத்தில் மாடு வேற கத்திண்டே இருக்கே, தீனி வச்சியா, இல்லையா? இந்தச் சின்னப் பையன்களை வேலைக்கு வெச்சுண்டாலே இப்படித்தான். பொறுப்பா வேலையைக் கவனிப்போம்னு கிடையாது. விளையாட்டிலேயே புத்தி...''

ரகுவை அவன் மறுப்புகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமலேயே பிடுங்கித் தன் இடுப்பில் வைத்துக் கொண்டு அவள் உள்ளே போனாள். உள்ளேயும் அவளிடம் ரகு, ''அம்மா, அம்மா...'' என்று அழைத்து ஏதோ சொல்லிக் கொண்டிருந்தது வேலுவுக்குக் கேட்டது. என்ன சொல்கிறான் ரகு? புகாரா? தன்னைப் பற்றியா? என்ன புகார்?

பேதி ஆகப் போவது போல் வயிற்றை ஒரு சங்கடம் கௌவியது. மனம் பொருந்தாமலேயே துணிகளைத் துவைத்து உலர்த்தினான். கொட்டிலுக்குச் சென்று பசுவுக்குத் தவிடும் பிண்ணாக்கும் வைத்த பிறகு தொழுவத்தைப் பெருக்கிக் கழுவி சுத்தம் செய்தான். குனிந்தபடியே வேலை செய்து கொண்டிருந்ததால் இடுப்பு நொந்தது. நோவு தீரச் சற்று நிமிர்ந்து நின்று இடுப்பைத் தடவி விட்டுக் கொண்டான். உடலெங்கும் வைகாசி, வேர்வையாய் ஓடியது.

ரகு சொல்லாமல் இருக்க வேண்டும், கடவுளே!

தேய்த்துக் கழுவிய பாத்திரங்களை உள்ளே கொண்டு வைத்தபோது ரகு தூங்கிக் கொண்டிருந்ததை வேலு கவனித்தான். அப்பாடா! நல்லவேளை. தூங்கியெழுந்தால் குழந்தைக்குக் காலை நிகழ்ச்சிகள் மறந்து விடும்... பின் முற்



றத்தில் தொழுவத்தின் கூரை நிழல் கவிந்த இடத்தில் வேலு படுத்துக் கொண்டான். களைப்பாலும் வெயிலாலும் உடனே தூக்கம் வந்து விட்டது.

''சே, எழுந்திருடா, தண்டச்சோறு. பட்டப்பகல்லே என்னடா கும்பகர்ணத் தூக்கம்?''

அவன் அதிர்ந்து விழித்துக் கொண்டான்.

ரகு ... சொல்லியிருப்பானோ?

மீண்டும் அடிவயிற்றில் கொக்கிப் பிடியாக இறுக்கம் கௌவியது.

''ஏ வேலு!''

முதுகுத்தண்டில் பனி. ''எ...என்னம்மா?''

''உன் மவை வந்து வாங்கிண்டு போகப் படாதா? மகாராஜாவுக்குக் கையில கொண்டு வந்து கொடுக்கணுமாக்கும்?''

தன் தேநீரைப் பருகி விட்டு, வீட்டார்கள் உபயோகித்திருந்த டிபன் தட்டுக்களையும் காப்பி டீ தம்ளர்களையும் எடுத்து வந்து கழுவிக் கொண்டு போய் வைத்தான். காம்பவுண்டைப் பெருக்கினான். செடிகளுக்கு நீர் பாய்ச்சினான். வெயில் இறங்கி மாலைப் பொழுது பிறந்ததைக் கொண்டாடும் வகையில் தன் சட்டையை எடுத்து அணிந்து கொண்டான். அதன் நீளத்தில் டிராயரின் பின்புறக் கிழிசல் மறைந்தது.

''இந்தாடா வேலு, குழந்தையைக் கொஞ்சம் வாசல்பக்கம் எடுத்துண்டு போய் விளையாட்டுக் காட்டு.''

ரகுவையும் அவன் பந்தையும் தூக்கிக் கொண்டு வேலு வாயிற்புறம் வந்தான். ரகு ''என்னை விடு, விடு'' என்று அவன் கரங்களிலிருந்து திமிற ஆரம்பித்தான்.

''ஏன் ரகு என்னண்டை வர மாட்டேங்கிறே? நான்... காலைல உன்னை ஒண்ணும் செய்யலியே!''

ரகுவை இறக்கி விட்டு அவசரமாகப் பந்தை அவன் பக்கம் வீசினான் வேலு. ''நீ விளையாடு கண்ணா...'' குழந்தை மறந்து விட வேண்டுமே...

''எனக்கு ஒண்ணும் நீ பந்துபோட வேணாம் போ''

''ஏன் அப்படிச் சொல்றே ரகு? தினம் என்கூடப் பந்து விளையாடுவியே? இன்னிக்கு... கோவமா? கோச்சுக்காதே, ரகு. நான்தான் உன்னை ஒண்ணும் செய்யவே இல்லேயே! உன்னை ஒண்ணும் நான் அடிக்கவேயில்லே, சும்மாத் தட்டினேன், அவ்வளவு தானே?...''

அவன் பேசிக் கொண்டிருந்த போதே ரகு வீட்டுக்குள் ஓடினான்.

ஐந்து நிமிடங்களாயின. திடீரென்று ரகுவின் தாயின் குரல் வீட்டினுள்ளிருந்து ''டே வேலு, இங்கே வா'' என்று உரக்க ஒலித்தது.

வேலு அசைவற்றுப் போனான்.

''இங்கே வாடான்னா? டே வேலு, வா இப்படி?''

ரகு சொல்லி விட்டான்!

கணப்பொழுதில் வேலுவின் முகம் வெளிறியது. உடல் வேர்வையில் மூழ்கியது. குரல் எழும்ப முடியாமல் தொண்டை ஒட்டிக் கொண்டது.

''டே வேலுஊஊ! உன்னைத்தாண்டா படவா கூப்பிடறேன், காது என்ன செவிடா? உடனே வாடா இங்கே. ரகு என்ன சொல்றான் பார்த்தியா?''

அவனைச் சும்மா விடமாட்டார்கள். எங்கள் குழந்தை மேல் கை வைத்தாயா என்று அடித்து நொறுக்கி விடுவார்கள்.

ஒரு கணம் வேலு கல்லாய் நின்றான். உணர்வுகளெல்லாம் ஊசிமுனைகளாய் அதிகூர்மையுடன் சிலிர்த்துக் கொண்டன. வாய் உலர்ந்து போயிற்று. பார்வை வீட்டை வெறித்தது. அடுத்த கணம் அவன் அப்படியே திரும்பி வீட்டை விட்டு வெளியே ஓட ஆரம்பித்தான்.

''வேலு டே வேலுப் பயலே, எங்கேடா தொலைஞ்சு போனே? உடனே வாடா இப்படி! வேலு! வேலு! டே ராஸ்கல், வேலு!''

அந்தக் குரலைப் பின்னே விட்டு வேலு ஓடிக் கொண்டேயிருந்தான்.

பந்து வைத்து விளையாடப் பிடிக்காமல் திடீரென்று தன் ஆடுகுதிரை நினைவுக்கு வந்து ரகு வீட்டினுள் ஓடிச் சென்று தாயிடம் அது பற்றிக் கூறியிருந்தான். அந்தப் பொம்மைக் குதிரையை வாசலில் கொண்டு வந்து வைக்க வேலுவை அழைத்தால் அந்தப் பொடிப் பயல் மதித்து உள்ளே வந்தால்தானே? ரகுவின் தாய் மிக்க கோபத்துடன், ''இப்போ நீ உடனே வரலையானால் என்ன செய்யறேன் பார் வேலு'' என்று அதட்டினாள்.

அந்த வார்த்தைகளுக்கும் வேலுவுக்கும் சம்பந்தமே இல்லை. அவன் இப்போது நெடுந்தொலைவில் பறக்கும் ஒரு புள்ளி. அவன் கால்கள் கிலியின் சிறகுகள்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

நாட்டின் முன்னேற்றம் என்பது, திட்டம் தீட்டப்பட்ட மூன்றாண்டுகளில், ஆறு ஏழைகளின் வரிச்செலும்புகளைக் கொஞ்சமாவது தசை மூடிமறைப்பதைக் குறிக்குமே தவிர, போடப்பட்ட சாலைகளின் நீளத்தையோ திறக்கப்பட்ட மருத்துவமனைகளின் எண்ணிக்கையையோ குறிக்காது.

-காந்தியப் பொருளாதார மேதை டாக்டர் ஜே. சி. குமரப்பா கூறியது.

— க. வேம்புலு.

அம்மா அம்மா தான்!

நீ மிக இளைத்து விட்டாய். முழு ஓய்வு எடுக்க வேண்டும் என்கிறார் டாக்டர். நீ குவாலிடி கோல்டன் பிஸ்கட் மட்டும் தின்ன வேண்டும். அவ்வளவு நல்லது.

ஊட்டம் அம்மா! சிக்கனமும் கூட.

kwality's golden BISCUITS

KWALITY GOLDEN BISCUITS

கெட்டியான பாக்கெட்டுகளிலும் உதிரியாகவும் கிடைக்கும்.

ASP-KFP-7910

IS 1011



போலிகள் ஜாக்கிரதை!

# குவாலிடிஸ் கோல்டன்

## ஆரோக்கியமான குடும்ப பிஸ்கட்

## செலவு குறைந்தது



குவாலிடி ஃபுட் ப்ராடக்ட்ஸ்
பெங்களூர்-560039

குவாலிடி உயர்தர பிஸ்கோத்துகளைத் தயாரிக்கிறது.




ஸ்ரீ கணேஷ்ராம்ஸ்

**TAM - EX**

**(டாம் - எக்ஸ்).**

**மசாலா சேர்ந்த**

**புளி - சத்து**




புளிக்குப் பதிலாக உபயோகிக்கலாம்

புளியினின்று எடுக்கப்பட்ட சத்துடன் பெருங்காயம், மஞ்சள், கருவேப்பிலை, கடுகு போன்ற மசாலா சாமான்களும் சேர்க்கப்பட்டுள்ளது. புளி சேர்க்கவேண்டியதில் எல்லாம் இந்த சத்தையே உபயோகித்து சாம்பார், ரசம், வத்தல் குழம்பு, மிளகு ரசம், கொத்சு, புளியோதரை, புளி இஞ்சி முதலியவற்றை விரைவில், சுலபமாகத் தயாரித்து விடலாம். மசாலா சாமான்கள் அனைத்தும் சேர்ந்துள்ளதால் வேறு எந்த சாமானும் தேவை இல்லை. அதி சிக்கனமானதும்கூட!

**ஸ்ரீ கணேஷ்ராம் & கோ.,**

ப. நெ. 46 - பு. நெ. 193, தம்புசெட்டி தெரு,
சென்னை - 600 001.

போன்: 20401 & 20402 — தந்தி: "COCHUTNI"

---

தயாரிப்பு முறையை உருவாக்கி, தர உயர்வை நிர்ணயிப்பவர்கள் :

**ஸ்ரீ கணேஷ்ராம்ஸ் அனலிடிக்கல் லாபரெட்டரிஸ்**

---

உங்கள் தேவையறிந்து சேவை செய்யும் உற்ற நண்பன்

# தி கும்பகோணம் ஸிட்டி யூனியன் பாங்க் லிட்.

[Regd. Office : 149, T. S. R. (பெரிய) தெரு, கும்பகோணம்]

எங்களது டெபாசிட் திட்டங்கள் :

* உங்கள் வாழ்வை வளமாக்கும் வாமன விஸ்வரூபா
* நிரந்தர சேமிப்பு
* மாதாந்திர சேமிப்பு
* தினசரி சேமிப்பு
* ரொக்கப் பத்திரங்கள்

தங்கள் சேவைக்காக தமிழகத்தில் 50 கிளைகள்!





# இண்டர்வியூ

-அபமி-

ஸ்டெனோவை அழைப்பதற்காக பஸ்ஸரை அழுத்தப் போகிறாள். போனவள், 'சட்'டெனக் கையை இழுத்துக் கொண்டு 'ஓ... ஸ்டெனோ போஸ்ட்தான் வேகண்ட் ஆச்சே' — என்று முணுமுணுத்துக் கொள்கிறாள்.

காலிங் பெல்லை அடிக்கிறாள்.

மானேஜர் வந்ததும் வராததுமாய், ''வாட் எபௌட் ஸ்டெனோ போஸ்ட்?'' — என்று வினவுகிறார்.

''இன்னை வரைக்கும் எட்டுப்பேர் அப்ளை பண்ணியிருக்காங்க. குவாலிபிகேஷனையெல்லாம் செக் பண்ணிக்கிட்டு இருக்கேன். இன்னும் பத்து நிமிஷத்திலே பைலை அனுப்பறேன். இமீடியட்டா இண்டர்வியூ வச்சு செலக்ட் பண்ணிடலாம்...'' என்கிறார் மானேஜர்.

''யெஸ் டூ இட்'' என்று சொல்லி மானேஜரை அனுப்பிவிட்டு மோதி அண்ட் மோதி கம்பெனிக்கு டயல்செய்வதற்காகத் தன் டயரியில் நம்பரைத் தேடுகிறாள். அக்கம்பெனியில் அக்கவுண்ட்ஸ் ஆபீஸராக இருப்பவன் அவளது கணவன் பாஸ்கர். இதுவரை அவன் மூன்று நான்கு தடவைகள்தான் தன் கம்பெனியிலிருந்து அவளுக்குப் போன் செய்திருக்கிறான். ஏதும் தலைபோகிற வீட்டு விவகாரங்கள் இருந்தால் மட்டுமே அவர்கள் இருவரும் போனில் பேசிக் கொள்வார்கள். மற்றபடி அவரவருக்கு அவரவர் ஆபீஸ்வேலை.

அவளது வலப்புறச் சுவரில் அவளுடைய அப்பா படம் மாட்டப்பட்டிருக்கிறது. அவர் அவளுடைய அப்பா மட்டுமா என்ன? — இந்தக் கம்பெனி சேர்மேனும் ஆயிற்றே — இந்தக் கம்பெனி மட்டுமல்ல, கோயம்புத்

தூரில் உள்ள மூன்று பெரிய கம்பெனிகளுக்கும் அவர்தான் சேர்மேன். மகள் நளினி மெட்ராஸ் கம்பெனியைத் திறம்பட நிர்வகித்துக் கொண்டிருக்கிறாள் என்ற தைரியத்தில் அவர் பெரும்பாலும் கோயம்புத்தூரிலேயே இருப்பார். பத்து நாட்களுக்கு ஒருமுறை சென்னைக்கு வருவார். இரண்டு நாட்கள் இருப்பார். இரண்டு நாட்களும் பேத்தி ரீனாவைக் கொஞ்சோ கொஞ்சென்று கொஞ்சுவார். மூன்றாவது நாள் பரக்கப் பரக்கப் பிளேன் ஏறிச் சென்றுவிடுவார். அவர் எப்போதுமே இப்படித்தான். எதிலும் பரபரப்பு. எப்போதும் பரபரப்பு. ஆனால் ஒரே ஒரு எக்ஸ்ஸெப்ஷன் — அவளது கல்யாண விஷயம். மோதி அண்ட் மோதி கம்பெனியில் அப்போது அக்கௌண்ட்ஸ் அஸிஸ்டெண்ட் ஆக இருந்த பாஸ்கரை அவள் காதலித்ததும், மிகுந்த நம்பிக்கையோடு அவள் அதைத் தன் தந்தையிடம் தெரிவித்ததையும் நளினி அடிக்கடி நினைத்துப் பார்ப்பதுண்டு.

அப்பா சொன்னதுபோல் நளினியால் பாஸ்கரை மறக்க இயலவில்லை.

''டாடி, என்னால அவரை மறக்க முடியலே. நான் அவரை மனதார விரும்பறேன்'' என்று அவள் தன் விருப்பத்தை வெளியிட்டபோது, அப்பா சூடாகக் கேட்டார்: ''பணத்துக்காக அவன் உன்னை வளைக்கப் பார்க்கிறான் போலே... தெரிஞ்சுக்கோ—அவனை நீ கல்யாணம் செஞ்சுக்கிட்டா அவனோடேயே போயிட வேண்டியதுதான்... என்னோட வீட்டிலோ, சொத்திலோ உனக்கு எந்தப் பாத்தியதையும் இல்லாம ஆக்கிடுவேன்... சம்மதமா?''

பாஸ்கரிடம் விஷயத்தைச் சொன்னாள் அவள். அதன்பின் பாஸ்கர் நளினியின் தந்தையைச் சந்தித்துப் பேசினான். ''என் சம்பளத்திலேயே உங்க மகளை எந்தக் குறையும் இல்லாமக் காப்பாத்த முடியும்...''

பாஸ்கர் போய் விட்டான். அடுத்த வாரத்தில் நளினியின் அப்பாவே பாஸ்கரைத் தேடிப் போனார். ''என் மகளுக்கும் உனக்கு மிடையேயுள்ள சிநேகிதம் மிக உறுதியானதுன்னு புரிஞ்சுக்கிட்டேன். அத்தனை செலவையும் நானே ஏற்று அடுத்த மாசமே கல்யாணத்தை முடிச்சுடறேன்.''

மானேஜர் வரும் காலடியோசை கேட்டு நளினி நிமிர்கிறாள்.

''இண்டர்வியூ பைல். வர்ற வெள்ளிக்கிழமை — 20ம்தேதி இண்டர்வியூவை வச்சுக்கணும்னு எழுதியிருக்கேன். எம். டி. அப்ருவ் பண்ணணும்...'' மானேஜர் பைலை நீட்டுகிறார்.

''இருபதாம் தேதியா? — நோ... அன்னிக்கி வேறே இண்டர்வியூ இருக்கு...''

மானேஜர் விழிக்கிறார். ''வேறே இண்டர்வியூவா? — அப்பிடி என்ன இருக்கு இந்தக் கம்பெனியில் நமக்குத் தெரியாமல்?''

மானேஜர்விழிப்பதைப்பார்த்துச்சொல்லக்கூடாத ஒன்றைச் சொல்லிய தன் தவற்றை உணர்ந்தவளாய், சமாதானமாய், ''ஒண்ணுமில்லே. அது என்னோட சொந்த இண்டர்வியூ. கம்பெனிக்கும் அதுக்கும் எந்தச் சம்பந்தமுமில்லே'' என்கிறாள். பின் மானேஜரிடமிருந்து பைலை வாங்கி அதில், 'இருபத்தி மூன்றும் தேதி இண்டர்வியூ வைத்துக் கொள்ளலாம்' என்று எழுதிக் கையொப்பமிட்டுத் திரும்பத் தருகிறாள்.

சந்திப்பு நான்கு மணிக்கு என்றுதான் ஏற்பாடு. ஆனால் கலோசனா மூன்றுக்கெல்லாம் வந்து விட்டாள். அப்போது நளினி மட்டும் தான் இருக்கிறாள். ஆபீஸுக்கு லீவு போட்டு விட்டு வந்த பாஸ்கரும் இதற்காகவே கோயம்புத்தூரிலிருந்து வந்து கம்பெனி பைல்களில் மூழ்கிக் கிடக்கும் அவள் அப்பாவும் மாடியில் தனித்தனி அறைகளில் இருந்தனர்.

கலோசனாவைக் கண்டு நளினியும், நளினியைக் கண்டு கலோசனாவும் வியப்பில் ஆழ்கின்றனர். 'பாஸ்கரின் மனைவி இத்தனை அழகானவளா?'— என்று கலோசனாவுக்கு வியப்பு. 'இவளுக்கு இத்தனை சின்ன வயசா?' — என்று நளினிவுக்கு வியப்பு.

நளினியின் முக மலர்ச்சியையும், அவள் தன்னை எந்தவித வெறுப்பும் இன்றி இனிமையாக ஒரு சிநேக பாவத்துடன் உபசரிப்பதையும் கண்டு கலோசனா பெரும் வியப்படைகிறாள். ''எனக்கு ரொம்ப சந்தோஷமாயிருக்கு'' என்கிறாள்.

''நேத்துத்தான் பாஸ்கர் சொன்னார், நீங்க வேலையை ராஜினாமா செஞ்சுட்டீங்களாமே?''

''ஆமாம் அக்கா...'' என்ற கலோசனா, 'சட்'டென நாக்கைக் கடித்துக் கொண்டு விழிகளில் பயம் வெளிப்பட, ''உங்களை நான் அக்கான்னு கூப்பிடலாமா?'' என்று கேட்கிறாள். நளினி மௌனமாகச் சலனமின்றி இருக்கிறாள். நளினியின் முகத்தில் எவ்வித எதிர்ப்பையும் காணாததினால், அவளது மௌனத்தையே ஓர் இணக்கமாகக் கருதி, ''நான் ராஜினாமா செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் வந்துடுச்சக்கா. ஆபீஸிலே வேண்டாதவங்க, நானும் இவரும் ஆபீஸை அசிங்கப் படுத்துறதா எம். டி.க்கு எழுத்து மூலமாகவே புகார் கொடுத்துட்டாங்க. என்

---

தபால் விலாசங்களில் 'பின் கோடு' (Pin Code) எழுதுவதில் எல்லா மாநிலங்களை விடத் தமிழகம் முன்னணியில் இருப்பதாகக் கணக்கெடுத்துள்ளார்கள். பின் கோடு எழுதப்படும் மொத்த தபால் எண்ணிக்கையில் தமிழகத்திலிருந்து எழுதப்பட்டவை 38 சதவிதம். இரண்டாவதாக 30 சதவிதம் பெறுவது மஹாராஷ்ட்ரா மாநிலம்.

ஆதாரம்: ஹிந்து- தகவல்: சிவாஜி



# செழிப்பான தொழில் வளர்ச்சிக்குத் தேவை-

# டிஐஐஸியின் சிறப்பான சேவை!

**எளிதான விதிமுறையில் சுலப கடனுதவி/ஆரம்ப முதலீட்டு உதவி (Seed Capital) அளிக்கும் திட்டம்.**



**டிஐஐஸியின் சிறப்பான திட்டம் —
ஆரம்ப முதலீட்டு உதவித் திட்டம்**

இத்திட்டத்தின் கீழ் கிராமப்புற மற்றும் பின்தங்கிய பகுதிகளில் உள்ள தொழில் அமைப்புகள், தொழில்நுட்ப வினைஞர்கள், ஏற்றுமதிப் பொருட்களைத் தயாரிக்கும் அமைப்புகள் மற்றும் அதிக வேலை வாய்ப்புகளை அளிக்கும் தொழிற் கூடங்கள் ஆகியவைகளுக்கு டிஐஐஸி சிறப்பான சலுகைகள் வழங்கி ஆரம்ப முதலீட்டு உதவி அளிக்கிறது.
தொழில் நுட்ப வினைஞர்களும் மற்றும் கலைஞர்களும் இந்த திட்டத்தின்படி நிதி உதவி பெறலாம்.

**இத்திட்டத்தின் சிறப்பு அம்சங்கள்:**

- ரூ. 2 லட்சம் வரை கடனுதவி
- வட்டி விகிதம் ஆண்டுக்கு 1% மட்டுமே
- வட்டி செலுத்த 3 ஆண்டுகள் விடுமுறை
- அசல் தவணை தொகை செலுத்த 5 ஆண்டு அவகாசம்

தொழில் துவக்குபவர்களுக்கு எளிதான கடனுதவி அளித்திட கனிவுடன் காத்திருக்கிறது டிஐஐஸி!




மேற்கொண்டு விவரங்களுக்கு தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:
நிர்வாக இயக்குநர்,

**தமிழ்நாடு தொழில் முதலீட்டுக் கழகம்,**

27, ஒயிட்ஸ் சாலை, சென்னை-600 014.
தொலைபேசி: 83078 . தந்தி: MINDVEST டெலக்ஸ்: MIIC - 7164
மண்டல அலுவலகங்கள்: கோயமுத்தூர், மதுரை
கிளை அலுவலகங்கள்: கடலூர், தர்மபுரி, சேலம், தஞ்சாவூர், திருச்சி, திருநெல்வேலி மற்றும் வேலூர்.

***புதிய தொழில்களை நிறுவவும், நவீனமாக்கவும் விஸ்தரிக்கவும் மற்றும் பலமுனை உற்பத்திக்கு வகை செய்யவும் டிஐஐஸி உதவியை நாடுவீர்.***

ஸ்ரீரஸ்து - சுபமஸ்து - ஸ்ரீ வெங்கடேசப்ரசன்ன

ஜெகத்குரு ஸ்ரீ ஆசார்யாள் ஆசியுடன்

1-7-1979ல் புறப்பட இருக்கும் 31 நாட்கள் கொண்ட எமது

# அமரநாத யாத்திரையில்

III Tier Sleeper Coachல் இன்னும் 15 இடங்கள் மட்டுமே காலி உள்ளன. கடலூர் ஸ்ரீமதி A. கிருஷ்ணவேணி அம்மாள், மேட்டுப்பாளையம் ஸ்ரீமதி நாமகிரி லக்ஷ்மி, சென்னை 28 ஸ்ரீமதி சுலோசனா கிருஷ்ணசுவாமி, சிவகங்கை ஸ்ரீமதி ஞானசுந்தரி முதலிய தாய்மார்கள் தனியாகவும் மற்றும் பல முக்கியஸ்தர்களும் கலந்துகொள்கிறார்கள். குதிரைச் செலவுகள் நீங்கலாக மற்ற செலவுகள் யாவும் சேர்ந்து நபர் ஒன்றுக்கு

ரூ. 1500/- மட்டுமே.

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி யாத்ரா சர்வீஸ்

21. அய்யாபிள்ளை தெரு. :: சென்னை-600 005

டெலிபோன் : 841957



Now adding

$Na_2SO_4$

to our famous range

$CS_2$
HCl
$Cl_2$
$H_2SO_4$
NaOH

# CENTURY CHEMICALS

## OFFER

**$Na_2SO_4$,** besides

**$CS_2$, HCL, $CL_2$, $H_2SO_4$, NaOH**

Chemicals Engineers all over India give first preference to CENTURY CHEMICALS products for consistent high quality and reliability. In most critical chemical processes when little allowance can be made, the first choice is CENTURY CHEMICALS products such as Carbon di Sulphide, Hydrochloric Acid, Chlorine, Sulphuric Acid, Sodium Hydroxide and now Sodium Sulphate.

Available in a variety of packings to suit individual customer requirements.

**CENTURY CHEMICALS**

(Prop: The Century Spg. & Mfg. Co. Ltd.)
Industry House, Churchgate Reclamation,
Bombay-400 020.

CONCEPT

ளுலே பாஸ்கரோட வேலைக்கு ஆபத்து வராம இருக்கறதுக்காக, நானே உடனே ராஜினாமாச் செய்துட்டேன்...''

''அப்போ இப்போ சும்மாதான் இருக்கீங்களா?''

''ஆமாம்க்கா. நெறைய கம்பெனிகளுக்கு அப்ளிகேஷன் போட்டிருக்கேன். இன்னும் ஒரு மாசத்திலே வேலை கிடைக்காமலா போயிடும்?''

''கலோசனா, என்னோட அப்பா உங்களுக்குக் கோயம்புத்தூர்லே ஒரு வேலை போட்டுத் தந்தா, இதுக்கு முன்னால வாங்கினதை விட நூறு ரூபா அதிகமாய்ப் போட்டுத் தந்தா, அந்த வேலையை ஏத்துப்பீங்களா?'' — என்று வினவுகிறாள்.

''சந்தோஷமா ஏத்துப்பேன் அக்கா'' என்ற கலோசனா, ''ஆனா அப்படித் தர்ற வேலை என்னோட குவாலிபிகேஷனைக் கருதித் தர்றதா இருக்கணும்... பாஸ்கருக்கும் எனக்குமுள்ள காதலுக்கு விலையா இருக்கக் கூடாது...'' என்கிறாள் அழுத்தமாய்.

''அதுசரி! பாஸ்கருக்கு இப்போ என்ன வயசுன்னு உங்களுக்குத் தெரியுமா''?

''வயசா? தெரியாதே; நான் கேட்டுக்கலே.''

''என்ன இருக்கும்னு நினைக்கிறீங்க?''

கலோசனா ஒருகணம் யோசிக்கிறாள். பின், ''முப்பது அல்லது முப்பத்திரண்டு'' என்கிறாள்.

நளினா 'கடகட'வெனச் சிரிக்கிறாள். ''அவருக்கு இப்போ நாற்பத்தி மூணு வயசு...''

நளினா எதிர்பார்த்த முக மாற்றத்தைச் கலோசனாவிடம் காணோம். நளினா தொடர்கிறாள்: ''யெஸ், நவ் ஹி இஸ் பார்ட்டி த்ரீ... அவருக்கும் எனக்கும் கல்யாணமாகிப் பதினைஞ்சு வருஷமாகுது. பார்த்தால் வாலிபராட்டம் தெரிகிறாரேயொழிய அவர் ரொம்பத் தளர்ந்துட்டார். பாஸ்கருக்கு ஒரு தாவணி போட்ட பெண் இருக்கிறாள் என்கிறது உங்களுக்குத் தெரியுமா? இல்லே, அதுவும் தெரிஞ்சுக்க வேண்டியதில்லேன்னு நினைக்கிறீங்களா?''

கலோசனா நளினாவை ஏறிட்டுப் பார்க்கிறாள். ''அவர் தனக்கு ஒரு பெண் இருக்கிறதாய்ச் சொல்லியிருக்கார். ஆனாலும், எங்க ஆழமான காதலுக்குமுன்னாலே இந்த விஷயங்களெல்லாம் ரொம்ப அற்பம் அக்கா...''

நளினா எச்சிலை விழுங்குகிறாள். பின், ஒரு புதிய உற்சாகத்தோடு, ''கலோசனா, உங்க காதலாலே பாஸ்கருக்கு அவரோட உறவினர் மத்தியிலே ஒரு தலைகுனிவும், பாஸ்கரோட குடும்பத்தார்க்கெல்லாம் வேதனையும் ஏற்படும்னு தெரிஞ்சுதான் ஏற்கெனவே மணமான அவரைக் காதலிச்சிருக்கீங்க, இல்லையா?'' என்கிறாள்.

கலோசனா அமைதியாகப் பதிலளிக்கிறாள், ''இல்லீங்க அக்கா. என்னோட வருகையாலே பாஸ்கரோட பெருமையை உணர்த்த முடியும்னு நான் உறுதியா நம்பறேன். அவரோட உறவினர் மத்தியிலே உடனே முடியாட்டாலும் காலப்போக்கிலே அவரோட பெருமையை உயர்த்திடலாம்கிற நம்பிக்கையிலேதான் அவரை நேசித்தேன். 'என்னோட மனைவி கொஞ்சம் முற்போக்கான சிந்தனைகள் உள்ளவள். காதலை முழுமையாய் அனுபவபூர்வமாய்ப் புரிஞ்சுக்கிட்டவள். நம்ம பரிசுத்தமான காதலை அவகிட்டே சொன்னா, நிச்சயம் மனமகிழ்ச்சியோட உன்னையும் அவளுக்குச் சமமா ஏத்துப்பா'ன்னார். உங்க முகத்தை முதன் முதலாப் பாத்ததும் பாஸ்கர் உங்களைப் பற்றிச் சொன்னதெல்லாம் நூத்துக்கு நூறு சரின்னு புரிஞ்சுக்கிட்டேன். அக்கா பாஸ்கரை நான் கல்யாணம் செஞ்சுக்கிட்டு உங்களுக்குத் தங்கையா இருக்கிறதிலே உங்களுக்கு ஆட்சேபனை ஏதும் இல்லை தானே?'' என்கிறாள்.

நளினா சிரிக்கிறாள். பின் கண்களைத் தாழ்த்திக் கொண்டே சொல்கிறாள்: ''இது என்னை மட்டும் பொறுத்த விஷயம்னா உங்க கேள்விக்கு நான் பதில் சொல்லலாம். ஆனா இது பலபேரையும் பொறுத்த விஷயம். நீங்க கேட்ட இதே கேள்வியை நான் அவங்ககிட்டெயெல்லாம் கேட்டு அவங்களுக்கு இதிலே ஆட்சேபனை ஏதும் உண்டா இல்லையாங்கிறதைத் தெரிஞ்சுக்கிட்டப்புறம்தான், அவங்க பதிலோட அடிப்படையில் நான் உங்களுக்குப் பதில் சொல்ல முடியும்... மேலே என்னோட அப்பா இருக்கார். நாலு மணி வாக்கில் கீழே வரேன்னார். வருவார். என் டாட்டர் ஸ்கூல் போயிருக்காள். அவளும் வர்ற நேரம்தான். மேலோட்டமா அவங்க கருத்தையெல்லாம் நான் ஏற்கெனவே தெரிஞ்சுக்கிட்டேன். ஆனா உங்களைப் பார்க்காம, உங்க கூடப் பேசாம தெரிவிச்ச அவங்க கருத்து எதுவும் சரியானதாவோ, முடிவானதாவோ இருக்க முடியாதுல்லே? அதுக்குத்தான் இந்த இண்டர்வியூ...''

''மேலோட்டமா அவங்க கருத்தைத் தெரிஞ்சுக்கிட்டதாய்ச் சொன்னீங்க. உங்க அப்பா என்ன சொல்றார்?''

''இது அவர் வீடு. பாஸ்கர் சம்பளம், அவரோட காரை மெயின்டைன் செய்யறதுக்குத்தான் போதுமானதாக இருக்கு. மற்றப்படி இந்த வீட்டுச் செலவுகள்லாம் என்னோட சம்பளம்னும், அப்பாவோட சம்பளம்னும் அப்பா கம்பெனியிலிருந்து எடுத்துக்கிற பணத்தால்தான் நடக்குது. பாஸ்கர் ஒருவேளை உங்களை இரண்டாம் கல்யாணம் செஞ்சுக்கிட்டா பாஸ்கர் தன்னோட சொத்து எதையும் அனுபவிக்கக் கூடாதுன்னார் அப்பா...''



ஒரு ஜிப்பி தான் காதலிக்கும் பெண்ணுக்கு ஒரு கடிதம் எழுதினான் சுருக்கமாக: ''அழகே உன்னை ஆராதிக்கிறேன்!''

பதிலும் சுருக்கமாகவே வந்தது: ''அழுக்கே உன்னை நிராகரிக்கிறேன்!''

—முத்து






''சொத்தை ஒரு பிரச்னையா நாங்க நினைக்கலேக்கா...''

''அதோட இருதார மணச்சட்டப்படி பாஸ்கர் மேலே கோர்ட்டு நடவடிக்கை எடுக்கணும்னு சொன்னார்.''

''மை காட்'' என்று அதிர்ந்து போகிறாள் கலோசனா. நளினா புன்னகைக்கிறாள். ''அப்பா தான் அப்பிடிச் சொன்னார். நான் சொல்லலே. பாஸ்கருக்கு அப்பிடி ஒரு பிரச்னை வர நான் விடமாட்டேன்...''

கலோசனா நிம்மதியாய் மூச்சு விடுகிறாள்.

மாடியிலிருந்து பாஸ்கரும், நளினாவின் அப்பாவும் இறங்கி வருகின்றனர். ''ஹலோ'' என்று புன்னகையுடன் கலோசனாவை வரவேற்றுவிட்டு அவளெதிரே சோபாவில் அமர்கிறான் பாஸ்கர். நளினாவின் அப்பா கலோசனாவை ஒரு குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்துவிட்டு, ஹாலை ஒட்டியிருந்த நளினாவின் அறைக்குள் நுழைந்து மாலைத் தினசரியில் கண்களை ஓட்டுகிறார்.

ஹாலில் பேச்சுத் தொடர்கிறது. நளினா கலோசனாவை உன்னிப்பாய்ப் பார்த்தபடி சொல்கிறாள்: ''கலோசனா! உங்ககூட பேசிப் பார்த்ததில் நீங்களும், பாஸ்கரும் உங்க காதலைப் பத்தித்தான் இதுவரைக்கும் யோசிச்சிக்கிட்டு இருந்திருக்கீங்களே தவிர, அதனோட விளைவுகளை நினைச்சே பார்த்ததில்லேன்னு புரிஞ்சுக்கிட்டேன்.''

கலோசனாவின் கண்கள் கண்ணீரை உகுக்கின்றன. ''அதுக்குத்தானக்கா உங்ககிட்டே அனுமதி கேக்குறேன். உங்க தங்கையா என்னை ஏத்துக்குங்க...''

நளினா சிரிக்கிறாள்: ''ஏற்கெனவே சொல்லியிருக்கேன் — இது என் ஒருத்தி சம்பந்தப்பட்டதில்லே... நீங்க எனக்குத் தங்கைன்னா, என் பொண்ணுக்குச் சித்தி. அதனாலே அவளும் உங்களை ஏத்துக்கணும். ஆனா அப்பிடி ஒரு புது உறவை அவ விரும்பலே... டாடி மறுமணம் செஞ்சுக்கிட்டார்னா அவ தற்கொலை செஞ்சுக்குவாளாம். அந்த ஷேமை அவளால் தாங்கிக்க முடியாதாம்...''

பாஸ்கரும், கலோசனாவும் தலை குனிகிறார்கள். நளினா தொடர்கிறாள்: ''மகளுக்கே அத்தனை ரோஷமும் அருமையும் இருக்கும்னா, அவளைப் பெத்த எனக்கு எத்தனை இருக்கும்? அவளோட தாயாரைப் பெற்ற, என் அப்பாவுக்கு எத்தனை இருக்கும்?''

கலோசனா பதறுகிறாள். நளினா கண்களில் நீர் மல்க, ''பாஸ்கருக்கு கோர்ட்டு கேஸ்ட்டுன்னு தொல்லை குடுக்காம இந்த உலகத்தை விட்டே நான் விலகிக்குவேன்''... என்று சொல்லிவிட்டுச் 'சட்'டென்று எழுந்து தன் அறையுள் புகுந்து விசித்து அழுகிறாள்.

பாஸ்கரும், கலோசனாவும் இக்பிரமை பிடித்தவர்கள்போல் வெறித்து அமர்ந்திருக்கின்றனர். அவர்களைத் தலைநீட்டி எட்டிப் பார்த்த நளினாவின் அப்பா, மகளின் முதுகைத் தட்டித் தேற்றுகிறார்: ''இடியட், இதிலே அழுறதுக்கு என்ன இருக்கு? அவங்களுக்குள்ளே காதல் இல்லேன்னுதான் தெரிஞ்சு போச்சே. கேவலம் ரெண்டுபேர் சாகிறதைச் சகிக்காத, ரெண்டு உறவுகள் அறுகிறதைத் தாங்கிக்காத ஒரு பிணைப்பு காதலா என்ன? சாம்ராஜ்யமே அழிஞ்சாக்கூடக் கலங்காதது எதுவோ, துண்டிக்கப்படாதது எதுவோ அந்தப் பிணைப்புத்தான் காதல். இவங்க காதலர்கள் இல்லே. அப்பிடீன்னு தவறா நினைச்சுக்கிட்டிருக்கிற சாதாரண பிரண்ட்ஸ்தான்...''

அன்று ஆபீஸுக்கு வந்ததும் வராததுமாக மானேஜர் கையில் பைலோடு நுழைகிறார். ''மேடம்... இன்னிக்குப் பத்து மணிக்கு ஸ்டெனோ இண்டர்வியூ... நாம கூப்பிட்டிருந்த எட்டுப்பேரும் வந்திருக்காங்க... இண்டர்வியூவை ஆரம்பிக்கலாமா?''

நளினா பைலை வாங்கி அந்த எட்டுப்பேர் கொண்ட லிஸ்டை மேலோட்டமாகப் பார்க்கிறாள். மாலதி... ஸ்டெல்லா... ருக்மிணி... கலோசனா — அட என்ன இது கலோசனாவா? ஓ...

இண்டர்வியூ ஆரம்பமாகிறது.. கலோசனா தவிர மீதி ஏழு பேரையும் இண்டர்வியூ செய்து அனுப்பிவிட்டுச் கலோசனாவை அழைக்கிறாள் நளினா...

கலோசனா வந்ததும் அவளை ஏறிட்டுப் பார்க்காமலேயே நளினா கேட்கிறாள்: ''இதுக்கு முன்னாலே வேலை செஞ்ச இடத்திலிருந்து ஏன் விலகினீங்க?''

''ஒரு பைத்தியக்காரத் தனமான காரியம் செஞ்சேன். மனச்சாட்சி உறுத்த விலகினேன்'' என்கிறாள் கலோசனா.

''அதே காரியத்தை இந்தக் கம்பெனியிலும் செய்ய மாட்டேங்கிறதுக்கு என்ன உறுதி?''

''பின் விளைவுகளைச் சிந்திச்சுப் பார்க்கிற பக்குவம் எனக்கு இப்போ வந்துடுச்சி. அதனாலே அம்மாதிரிக் காரியங்களை நான் இனி செய்ய மாட்டேன்...''

நளினா பைலில் கலோசனா பெயருக்கு முன்னால் அடையாளக் குறியிட்டு விட்டு நிமிர்கிறாள். ''மிஸ் கலோசனா, உங்களை செலக்ட் பண்ணியிருக்கேன்.''

''தாங்க்ஸ்'' என்கிறாள் கலோசனா.

நளினா குறும்புடன், ''செலக்ஷன், ஆபீஸ் வேலைக்கு மட்டும்தான்''... என்கிறாள்.

கலோசனா புன்னகைக்கிறாள்!

குறையாத குளிர்ச்சிக்கும்
கூந்தலின் வளர்ச்சிக்கும்...




# டி.எஸ்.ஆர்



**அரைக்கீரை விதைத் தைலம்**
மற்றும் சந்தனாதித் தைலம்
பொன்னாங்கண்ணி தைலம்
டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம் ஸ்தாபிதம் 1909

Criterion TSR 3511 TM

# தமிழக முன்னேற்றம்:

# கலைஞரின் கருத்துக்கள்

கேள்வி: காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் திரு ஆர். வெங்கட்ராமன் தொழிலமைச்சராக இருந்த போது தொழில் துறையில், இந்திய மாநிலங்களில் இரண்டாவது ஸ்தானத்தை வகித்த தமிழகம் தி. மு. க. ஆட்சிக் காலத்தில் இந்நிலையைத் தவற விட்டுத் தொழிலக முன்னேற்றத்தில் பின்தங்கி விட்டது என்று கூறப் படுவதற்குத் தாங்கள் அளிக்கும் விளக்கம் என்ன?

தொழில் வளர்ச்சியில் தமிழ்நாடு கழக ஆட்சியில் பின்தங்கி விட்டது என்று கூறப் படுவது தவறு. இந்தியா திட்டமிட்ட பொருளாதார முறையை ஏற்றுக் கொண்டு மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியது. இதன் பயன் எல்லா மாநிலங்களுக்கும் கிட்டியது போல் தமிழகத்துக்கும் பெரும் அளவில் கிட்டியது.

நெய்வேலி மின்சாரத் திட்டம்



1966 ஆம் ஆண்டிற்குப் பிறகு ஐந்தாண்டுத் திட்டங்களை நிதிப் பற்றாக்குறையால் தொடர்ந்து அமுல் நடத்த முடியவில்லை. அத்தகைய திட்டங்கள் ஓராண்டுத் திட்டங்களாக வடிவெடுத்தன. திட்ட விடுமுறை விடப்பட்டது. இதன் காரணமாகத் தொழில் துறையில் இந்தியா முழுவதிலும் தேக்க நிலை ஏற்பட்டது. ஆகவே கழக அரசினால்தான் தொழில்துறை பின்தங்கியது என்பது தவறாகும்.

தமிழகத்தில் தொழில் வளர்ச்சி எவ்வளவு அக்கறையோடு கவனம் செலுத்தப்பட்டது என்பதைக் கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் உணர்த்தும். 1967 இல் தமிழகத்தில் 1052 தொழிற்கூடங்கள் இருந்தன. கழக ஆட்சி முடியும் தறுவாயில் 6644 தொழிற் கூடங்களாக உயர்ந்தது. 1966ம் ஆண்டு தொழிற் சாலைகளின் மூலம் தொழிலாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட தொகை ரூ. 90.44 கோடி. 1976 ஆம் ஆண்டு இத்தொகை 276.11 கோடியாக உயர்ந்துள்ளது. 1966 ஆம் ஆண்டு ரூ. 668.07 கோடி மதிப்புள்ள பொருட்கள் தொழிற்சாலை மூலம் உற்பத்தி செய்யப்பட்டன. 1976 ஆம் ஆண்டு ரூ. 2,598–23 கோடி மதிப்புள்ள பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டன. அகில இந்திய நிகர உற்பத்தியையும் கழக ஆட்சிக் காலத்தில் தமிழ்நாட்டின் நிகர உற்பத்தியையும் ஒப்பிட்டுப் பார்த்தால், தமிழகத்தில் தொழில் வளர்ச்சி ஒரு நிலையான வளர்ச்சிப் போக்கினை அடைந்துள்ளது என்பதைக் காணலாம். 1966 ஆம் ஆண்டில் அகில இந்திய நிகர உற்பத்தியில் தொழில் உற்பத்தியின் பங்கு 23.3 விழுக்காடாக இருந்தது. அதே ஆண்டில், தமிழ்நாட்டின் நிகர உற்பத்தியில் தொழிற்துறையின் பங்கு 23 விழுக்காடாகும்.

1974–75ல் அகில இந்திய நிகர உற்பத்தியில் தொழில் உற்பத்தியின் பங்கு 23.4 விழுக்காடாக இருந்தது. கழக ஆட்சி முடியும் தறுவாயில் (1975 ஆம் ஆண்டு) தமிழ்நாட்டு நிகர உற்பத்தியில், தொழில் உற்பத்தியின் பங்கு 28.5 விழுக்காடு ஆகும்.



கூவத்தில் படகு





பூம்புகார்

அகில இந்திய நிகர உற்பத்தியில் தொழில் பங்கை விடத் தமிழ் நாட்டு நிகர உற்பத்தியின் பங்கு உயர்ந்து இருப்பதைக் காணலாம்.

தொழில் உற்பத்திக்கு அடிப்படையான மின் உற்பத்தி காங்கிரஸ் ஆட்சிக் காலத்தை விட கழக ஆட்சிக் காலத்தில் அதிகம். 1966 ஆம் ஆண்டு தமிழகத்தில் மின் உற்பத்தி 1070 மில்லியன் வாட்டாக இருந்தது. 1976 ஆம் ஆண்டு 1764 மில்லியன் வாட்டாக உயர்த்தப் பட்டது. இதைத் தவிர நெய்வேலியில் இரண்டாவது சுரங்கத் திட்டத்தின் மூலம் அனல் மின்சார உற்பத்தியைப் பெருக்குவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன. தூத்துக் குடியிலும் அனல் மின்சாரம் உற்பத்தி செய்யக் கழக அரசு போராடியது. 1966 ஆம் ஆண்டு தமிழகத்தின் (காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில்) அனல் மின்சார உற்பத்தி 101 மில்லியன் வாட். 1976ல் தமிழகத்தின் அனல் மின்சார உற்பத்தி 501 மில்லியன் வாட்டாக உயர்த்தப் பட்டது. இதைத் தவிர பல சிறிய சிறு தொழில் திட்டங்கள் நிறைவேற்றப் பட்டன. சிப்காட், சிட்கோ, டான்சி போன்ற சிறு தொழில் உற்பத்தி நிறுவனங்கள் கழக ஆட்சியில் நிறுவப் பட்டவை.

**கேள்வி:** மாநில சுயாட்சி கிடைப்பதன் மூலம் ஒரு மாநிலம், குறிப்பாகத் தமிழகம், தற்போதைய நிலையை விட எவ்விதத்தில் சிறப்பான வளர்ச்சியைப் பெற முடியும் என்று நம்புகிறீர்கள்?



இந்திய அரசியல் சட்டத்தின் அடிப்படையில் அமைந்துள்ள இந்தியக் கூட்டாட்சி முறையும் கடந்த முப்பது ஆண்டுகளாக டெல்லியில் ஆட்சி செய்த காங்கிரஸ் கட்சி பின்பற்றிய நடைமுறைகளும், அரசியல் சட்டத் திருத்தங்களும், மாநில உரிமைகளையும், மாநில செயல் ஊக்கத் திட்ட நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்துவதாக அமைந்தது. எந்தத் திட்டங்களைத் தொடங்க வேண்டுமானாலும் மத்திய அரசின் அனுமதியும், நிதி உதவியும் தேவைப்பட்டன. மத்தியிலும், மாநிலத்திலும் ஒரே கட்சி இருந்ததனால், இந்த அடிப்படைக் குறைபாடுகள் வெளிக் காட்டவில்லை. 1967க்குப் பிறகு பல்வேறு பொருளாதாரக் கருத்துக்களையும் திட்டங்களையும் அடிப்படையாகக் கொண்ட பல கட்சிகள் பல மாநிலங்களில் ஆட்சியைப் பிடித்தன. இதற்குப் பிறகுதான் மாநில காங்கிரஸ் கட்சியின் ஏகபோக அரசியல் அதிகாரத்திற்கு எதிராக அறைகூவல் விடப்பட்டது. மத்திய அரசின் தேவையற்ற குறுக்கீடுகள், தடைகள், மாநிலங்களுக்கு நிதி ஒதுக்குவதில் முரண்பாடுகள் போன்ற பல குறைகள் கட்-



வள்ளுவர் கோட்டம்



-டிக்காட்டப்பட்டன. இந்தக் குறைகள் நீக்கப் பட்டு மாநில சுயாட்சி அடைந்தால் தற் போதைய நிலையை விட எல்லா விதத்திலும் சிறப்பான வளர்ச்சியை மாநிலங்கள் அடைய லாம்.

**கேள்வி: நிதி உதவிக்கு மத்திய அரசையும் நீர்ப் பாசனம், மின்சக்தி போன்றவற்றிற்கு அண்டை மாநிலங்களையும் எதிர்பார்க்கும் சூழ்நிலையில், தமிழகத்திற்கு சுயாட்சி அளிக்கப் பட்டு விடுவதாகக் கொண்டாலும், ஒரு தீவு போல் நாம் ஒதுக்கப்பட்டு விடுவோமே! இதனால் தமிழக வளர்ச்சி பாதிக்கத்தானே படும்! எல்லா மாநிலங்களுக்கும் சுயாட்சி அளிக்க வேண்டும் என்று தாங்கள் கருத்து தெரி விக்கும் பட்சத்தில் அந்தந்த மாநிலங்களே கேட்காத பட்சத்தில் அவர்கள் சார்பில் கேட்க நமக்கு என்ன உரிமை இருப்பதாக நினைக்கி றீர்கள்?**

தி. மு. கழகம் கேட்பது இந்தியாவுக்கு உட்பட்டு இயங்கக் கூடிய மாநில சுயாட்சி தான். எந்தெந்த அதிகாரங்களை மத்திய அரசு செம்மையாக நடத்த முடியுமோ அந்தந்த அதிகாரங்கள் மத்திய அரசிடம் இருக்கும். எனவே எக்காரணம் கொண்டும் தமிழகம் ஒரு தீவு போல் ஒதுக்கப்பட்டு விடாது. மாறாக, மாநிலங்கள் பொருளாதார நிலைமைக்கு ஏற்றவாறும், நிதி வசதிகளுக்கு ஏற்றவாறும் திட்டங்களைத் தீட்டும். இன்று இருப்பது போல், நிதி உதவிக்கு ஏற்றாற் போல் திட்டங்களை தீட்டுவதும் குறைப் பதும் போன்ற அலங்கோலமான நிலை, மாநில சுயாட்சி வழங்கப் பட்டு விட்டால் இருக்காது. நீர்ப்பாசன வசதி போன்ற பிரச்னைகளில் ஒரு நாடு மற்றொரு நாட் டோடு ஒத்துப் போகும் போது, கூட் டமைப்பில் இருக்கக் கூடிய மாநிலங்கள் ஏன் ஒத்துப் போகக் கூடாது? அண்மையில் இந்தியாவும், வங்க தேசமும் அணைக்கட்டு கட்டுதல், நீர்ப்பங்கீடு செய்து கொள்ளுதல் போன்ற துறைகளில் சுமுகமான முடிவை எடுக்கவில்லையா? ஒன்பதாண்டு ஆட்சிக் காலத்தில் எல்லா மாநிலங்களோடும் ஒரு சுமுகமான உறவை வைத்திருந்தது. காவிரி நீர் பிரச்னையில், தமிழ்நாட்டுக்கும் கர்நாடகத்துக்கும் ஏற்பட்ட பிரச்னையை மத்திய அரசு அதிக கவனம் செலுத்தி இருந் தால் தீர்த்து வைத்து இருக்கலாம். ஆகவே மாநில சுயாட்சிக்கும் இது போன்று எழக் கூடிய பிரச்னைகளுக்கும் சம்பந்தம் இருப்ப தாகத் தெரிகிறது. மாநில சுயாட்சி கேட் பதே மாநிலங்களுக்குள் ஓர் ஒற்றுமையும் பொருளாதார வளர்ச்சியும் ஏற்படுத்தவும், எதிர்காலத்தில் ஒரு வலுவான இந்தியா உருவாவதற்கும்தான். எல்லா மாநிலங் களும் சுயாட்சி கேட்கவில்லை என்பது தவறு. 1967ல் தி. மு. க. மாநில சுயாட்சியைக் கோரியபோது இதே கேள்வி கேட்கப் பட்டது. அன்று தி. மு. க. எழுப்பிய பிரச்னை இன்று பல மாநில அரசுகளாலும் எழுப்பப் படுகிறது. மேற்கு வங்கத்தில் ஜோதிபாசு மாநில சுயாட்சியை வலியுறுத்து கிறார். கர்நாடக மாநில முதல்வர் இந்திரா காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த தேவராஜ் அர்ஸும், ஆந்திராவின் முதல்வர் சென்னா ரெட்டியும் கேரள மாநில முதல்வர் வாசு தேவ நாயரும் இக்கோரிக்கையை வலியுறுத்து கின்றனர். ஆகவே மாநில சுயாட்சிக் கோரிக்கை என்பது ஓர் அகில இந்திய பிரச் னையாக மாறிவிட்டது.

**கேள்வி: அகில இந்திய அரங்கில் கல்வித் துறையில் ஓர் உயர்ந்த ஸ்தானத்தைப் பெற் றிருந்த தமிழகம் சமீபத்திய ஏழெட்டு ஆண்டு களுக்குள் இத்துறையில் நலிவுற்றுள்ளதை ஒப்புக் கொள்கிறீர்களா! இந்நிலைக்குக் காரணம் என்னவென்று கருதுகிறீர்கள்?**

ஒப்புக் கொள்ளவில்லை. தமிழகத்தில் கழக ஆட்சிக் காலத்தில் பல வியக்கத்தக்க மாற்றங்கள் உருவாக்கப்பட்டன. 1966 ஆம் ஆண்டு காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் இருந்த ஆரம்பப் பள்ளிகளின் எண்ணிக்கை 21341 ஆகும். கழக ஆட்சிக் காலத்தில் 1976ஆம் ஆண்டு அது 26951 ஆக உயர்ந்துள்ளது. காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் பன்னிரண்டு லட்சமாக இருந்த உயர்நிலைக் கல்வி பயிலும் மாணவர்களின் எண்ணிக்கை ஒன்பதாண்டு கால தி. மு. க. ஆட்சியில் பதினாறு லட்சமாக உயர்ந்தது.

இருபதாண்டுகள் காங்கிரஸ் ஆட்சியில் இருந்த மொத்த கல்லூரிகளின் எண்ணிக்கை 93 ஆகும். ஒன்பதாண்டு கழக ஆட்சியில் இருந்த கல்லூரிகளின் எண்ணிக்கை 189. இவை தவிர மருத்துவக் கல்லூரி, விவசாயப் பல்கலைக் கழகம், சட்டக் கல்லூரி, தொழில் நுட்பப் பல்கலைக் கழகம் போன்ற பல கல்வி நிலையங்கள் விரிவுபடுத்தப் பட்டன. பி. யு. சி வரை இலவசக் கல்வி அளிக்கப்பட்டது. பிற்பட்டோர், தாழ்த்தப் பட்டோர் ஆகிய வர்கள் கல்வி பெறப் பல சலுகைகள் அளிக்கப் பட்டன. ஐ. ஏ. எஸ். போன்ற உயர் பதவி தேர்வுகளுக்காக சிறப்புப்பயிற்சி பெறத் தனிப் பயிற்சி மையங்கள் உருவாக்கப் பட்டன. கழக ஆட்சியின் போது ஏற்பட்ட இத்தகைய மறுமலர்ச்சியின் காரணமாகத்தான் கடந்த இரண்டாண்டு காலத்தில் ஐ. ஏ. எஸ். தேர்வு களில் பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட மாணவர்கள் தமிழகத்திலிருந்தும் தேர்ந் தெடுக்கப் பட்டார்கள் என்பது புலனாகும்.

---

ஃ ஏழை விவசாயிகளின் பிள் ளைகள் கல்லூரிக் கல்வியைப் பெற வேண்டும் என்ற இலட்சியத்தோடு, விவசாயிகளால், விவசாயிகளின் பெயரைத் தாங்கித் தமிழகத்தில் நடைபெற்று வரும் ஒரே கலைக் கல்லூரி மதுரை மாவட்டம் போடி நாயக்க னூரில் உள்ள 'ஏல விவசாயிகள் சங்கக் கல்லூரி' ஆகும்.

முத்து. தங்க ஐயப்பன்



**கேள்வி:** பல கட்சி முறை கட்சிகளுக்கிடையே ஆரோக்கியமான போட்டி மனப்பான்மையை உண்டாக்கி மக்களுக்கு நல்லன செய்து சிறந்த நிர்வாகத்தை ஏற்படுத்திக் கொடுக்கும் எண்ணத்தில் உண்டானது. தமிழகத்தில் தி. மு. க. விற்கும, அ. தி. மு. க. விற்கும் இடையே உள்ள கசப்புணர்ச்சியில் எல்லா விஷயங்களும் அரசியல் ஆக்கப்பட்டுத் தமிழகத்தின் வளர்ச்சிக்கும் பொருளாதார முன்னேற்றத்திற்கும் குந்தகம் விளைவிப்பதாக உள்ளதே! நல்ல திட்டங்களை அரசு கொண்டு வரும்போது நேசக்கரம் நீட்டி ஆதரவு தருவதும், அரசு தவறு செய்யும் போது அதனைச் சுட்டிக்காட்டி எதிர்ப்பதும் தான் எதிர்க்கட்சி ஆக்க பூர்வமாகச் செயல்படும் விதம் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?

தி. மு. க.விற்கும், அ. தி. மு. க. விற்கும் அரசியல் ரீதியில் வேறுபாடு இருப்பினும் அதன் காரணமாக எல்லாப் பிரச்னைகளும் அரசியலாக்கப் படுகிறதென்பதை நான் ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. எதிர்க் கட்சி என்கிற முறையில் கடந்த இரண்டாண்டு காலமாக எனது சட்டமன்றப் பேச்சையும் என் கட்சியினரின் சட்டமன்றப் பேச்சுக்களையும் உற்றுக் கவனித்தால் நாங்கள் எவ்வளவு ஆக்கப் பூர்வமான யோசனைகளைத் தந்துள்ளோம் என்பது புரியும். ஆளும் கட்சியின் திறமையற்ற நிர்வாகம், ஆணவப் போக்கு போன்றவைகளே பொருளாதார முன்னேற்றத்துக்கும், தமிழக வளர்ச்சிக்கும் தடையாக உள்ளன.

**கேள்வி:** தமிழகத்தின் விரைவான முன்னேற்றத்துக்காகத் தாங்கள் அளிக்கும், நடைமுறைக்குச் சாத்தியமான நான்கு திட்டங்கள் எவையாக இருக்கும்?

கழக ஆட்சிக் காலத்தில் தமிழகத் திட்டக் குழுவை நான் நியமித்தேன். அத்திட்டக் குழு பல்வேறு துறைகளுக்கான தொலை நோக்குத் திட்டங்களை வழங்கி இருக்கிறது. பல புகழ்பெற்ற பொருளாதார அறிஞர்கள் அன்றைய ஆட்சிப் பொறுப்பில் இருந்த என்னோடு விவாதித்துப் பல திட்டங்களை உருவாக்கி உள்ளனர். அத்திட்டங்கள் புத்தக வடிவிலும் அறிக்கை வடிவிலும் வெளிவந்துள்ளன. அவை அனைத்தும் நடைமுறைக்குச் சாத்தியமான திட்டங்கள்தான். சாத்தியமில்லாதது மாநிலத்தின் நிதிப் பற்றாக்குறை தான்.

**கேள்வி:** வீராணத்தில் வீணான பணம், கூவத்தில் கலந்த பணம், வள்ளுவர் கோட்டம், பூம்புகார் இவற்றில் செலவான பணம் ஆகியவற்றைக் கொண்டு தமிழகத்தில் தொழிற்சாலைகள் அமைக்கப் பட்டிருந்தால் வேலையில்லாத் திண்டாட்டம் குறைந்திருப்பதோடு தமிழகத்தின் தொழில், பொருளாதார வளர்ச்சிக்கு உதவி இருக்குமே! தங்களது அரசு இதனை மனதில் கொள்ளாமல் ஏன் செயல்பட்டது?

மேற்கூறிய திட்டங்களுக்காக மேற்கொள்ளப்பட்ட செலவினங்களுக்கும் வேலையில்லாத் திண்டாட்டத்திற்கும் முடிச்சுப் போடுவது முறையல்ல. வள்ளுவர் கோட்டம், பூம்புகார் போன்ற செலவினங்கள் பொருளாதார அடிப்படையில் பார்த்தால் கூட வரவேற்கக் கூடிய ஒரு அம்சமாகும். மத்திய மாநில அரசுகள் சுற்றுலாவைப் பெருக்கி அதன் மூலம் வருமானத்தைப் பெருக்கிக் கொள்வது நடைமுறையாக இருந்து வருகிறது. வள்ளுவர் கோட்டத்தில் குறைந்த அளவு நுழைவுக் கட்டணம் வைத்தும் கூட அரசுக்குப் பல ஆயிரக் கணக்கில் வரவு வருகிறது.

பூம்புகார் புதுப்பிக்கப்பட மேற்கொண்ட செலவை விட அங்கு வாழும் மீனவர்கள் பின்தங்கியோர் ஆகியோர் நலனுக்காகச் செலவிடப் பட்ட தொகையே பல மடங்காகும். மீனவர்களுக்கு மின் விசைப் படகுகளும், அவர்களுக்குக் குடியிருப்பு வசதிகளும் செய்து தரப்பட்டன. இத்தகைய திட்டங்கள் சமுதாயத்தின் அடிமட்டத்தில் வாழுகின்ற மக்களுக்காகத் தீட்டப்பட்டவை என்பதை மறந்து விடக் கூடாது.

கூவம் சீரமைப்புத் திட்டம் தொடங்கிய பிறகு அதன் கரையோரங்களிலிருந்து அசுத்தங்கள் அடியோடு நீக்கப்பட்டு சிமெண்ட் கரை சுவர் கட்டப்பட்டுள்ளது. மனசாட்சி உள்ள எவரும் கூவம் முன்பிருந்த நிலையையும் இப்போதுள்ள நிலையையும் ஒப்பிட்டுப் பார்த்தால் கூவத்துக்காகச் செலவிடப் பட்ட பணம் வீணாவதுதானா என்பதை உணர்வர். மாநகராட்சி நிர்வாகத்திற்கு உட்பட்ட பல கால்வாய்களும், கழிவுநீர்ச் சாக்கடைகளும் கூவத்தில் கலப்பதனால் பல இடையூறுகள் ஏற்பட்டன. இக்கால்வாய்களையும், கழிவு நீர்ப்பாதைகளையும் வேறு திசைகளில் திருப்பினால்தான் கூவம் சீர்திருத்தம், முழுமை அடையும். அரசியல் நோக்கத்திற்காக இத்திட்டத்தைக் குறைகூறும் நண்பர்கள் ஏன் இந்த முயற்சியைத் தொடர்ந்து மேற்கொள்ளக் கூடாது?

வீராணத் திட்டம் சென்னை நகர மக்களுக்குக் குடிநீர் வழங்கும் அருமையான திட்டமாகும். வீராணம் குடிநீர்த் திட்டம் மீண்டும் தொடங்கலாம் என்று நெருக்கடி காலத்தில் அமைக்கப்பட்ட நிபுணர் குழு கூடப் பரிந்துரை செய்தது. கழக ஆட்சி இருக்கும்போதே இத்திட்டத்தை முடிப்பதற்குப் பல முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. மத்திய அரசு அரசியல் காரணங்களுக்காக இதன் தொடர்பான கோப்புக்களை வேண்டுமென்றே அனுப்பாமல் தாமதித்தது. கிருஷ்ணா நதியிலிருந்து சென்னைக்குக் குடிநீர் வருகிறது என்ற இந்திராவின் அறிவிப்போடு அரசியல் திருவிளையாடல் முடிவடைந்தது. அ. தி. மு. க. அரசும் தி. மு. க. ஆட்சியைக் களங்கப் படுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு இத்திட்டத்தை மேலும் தொடராமல் வைத்திருக்கிறது. கழக ஆட்சிக் காலத்தில் மூதறிஞர் ராஜாஜி அவர்களுக்கு நினைவாலயம், பெருந்தலைவர் காமராஜர் அவர்களுக்கு நினைவாலயம், வீரபாண்டியக் கட்டபொம்மன் கோட்டை போன்ற நினைவுச் சின்னங்கள் எழுப்பப் பட்டன. இவைகளைக் கூட வீண் விரயம் என்று சிலர் எளிதாகக் கூறலாம். ஆனால் இதற்குப் பின்னால் அடங்கியிருக்கும் தியாகப் பண்பை மதிக்கும் உணர்வுகளைப் புரிந்து கொள்ளச் சிலரால் தான் முடியும்.

பேட்டி: **நாயகன்**

# தியாக வல்லபன்

## விக்கிரமன்

### அத்தியாயம் 14
### நம்பியின் மகள்

இளவரசுப் பட்டம் சூட்டுவதற்கான நாள் குறித்து, அந்தச் செய்தியைச் சோழ நாட்டிலுள்ள குறுநில மன்னர்களுக்கு மட்டும் அறிவிக்குமாறு சோழ மாமன்னர் இராஜராஜன் கட்டளையிட்டார். பாண்டிய, கீழைச் சாளுக்கிய, கங்க நாட்டவர்களுக்கு அறிவிக்க வேண்டாம் என்று அவர் கூறியதன் உள்ளர்த்தம் மற்றவர்களுக்குப் புரியவில்லை.

மகிழ்ச்சி நிறைந்த இந்தச் செய்தியால் வல்லபன் மனத்தில் எந்தவித உற்சாகமுமில்லை. அவனுக்கு ஒவ்வொரு நிகழ்ச்சியும் ஒவ்வொரு புதுக் கவலையை அளித்து வந்தது. பட்டமேற்பு விழாவின்போது திருமணச் சடங்குகளை நிறைவேற்ற வேண்டும். மணப்பெண் யார்? தன் மனத்துக்கு இனிய சந்திரப் பிரபாவை மணந்துகொள்ள முடியவில்லை. தாயும் அதற்குச் சம்மதம் தெரிவிக்கவில்லை. விரைவில் திரும்பி வருவேன் என்று சந்திரப்பிரபாவுக்கு வாக்குக் கொடுத்தது என்ன ஆவது? இளவரசர் வாக்குத் தவறிவிட்டார் என்ற அவப்பெயர் ஏற்பட வேண்டுமா?

திருக்கோவலூர் மலையமானின் வேண்டுகோள், அதிகாரக் கட்டளையாகத் தோன்றியது. தன் சகோதரனின் மகளை வல்லபனுக்கு மணம் புரிந்தே ஆக வேண்டும் என்ற தனது கோரிக்கைக்கு அவர் பலம் தேடிக் கொண்டிருந்தார். சோழச் சக்கரவர்த்திகளிடமும் அதைப் பற்றி அவர் கண்டிப்புடன் விவாதித்ததாகத் தெரிகிறது.

எல்லாவற்றிற்கும் மேலாக இப்போது வேறு ஒரு பிரச்னை:

சோழச் சக்கரவர்த்திகளின் இரு குழந்தைகளை — சோழ நாட்டின் நியாயமான வாரிசுகளை — காண, பெருமான் நம்பி அழைத்துச் செல்வதற்கு முன்பு செல்லும் வழியில் வீட்டுக்கு வல்லபனை வரவேற்றார்.

சோழ நாட்டின் மாதண்ட நாயகரும், பிரதம மந்திரியுமான பெருமான் நம்பியின் இல்லம் பெரும் மாளிகையாக இருக்கும்.



என்று எண்ணிச் சென்ற வல்லபனுக்கு ஏமாற்றமே காத்திருந்தது.

காவிரிக் கரை ஓரமாகச் சின்னஞ்சிறிய தோட்டம். தோட்டத்தின் நடுவே சிறுவீடு. மாடமில்லை. கூட கோபுரமில்லை. மதிள் சுவரில்லை. ஓர் ஓரம் அமைதியாக, புலிக் கொடி தவழ்ந்து பறந்து கொண்டிருந்தது. விசாலமான திண்ணை. தாழ்வாரம். ஒரு ஓடுவேயப்பட்ட அந்த வீடு, கோடை நாட்களிலும் குளுமையாக இருக்கும் வகையில் வேம்பு, மா, மரங்களின் கிளைகள் சுற்றி அடர்ந்து வளர்ந்திருந்தன. சலசல வென்று காற்றில் ஓசை எழுப்பிக் கொண்டிருக்கும் அரசமரம் ஒன்று, ஓடும் அருவியின் நினைவை அவ்வப்போது ஏற்படுத்திக் கொண்டிருந்தது. மெல்லிய குரலில் புள்ளினங்கள் அவ்வப்போது குரல் எழுப்பி விட்டுப் பறந்து சென்றவாறிருந்தன. அணிலொன்று மிகச் சுறுசுறுப்பாக இங்குமங்கும் ஓடிக் கொண்டிருந்தது.

வல்லபனும், பெருமான் நம்பியும் வரும்போது பசு மாட்டுக்குத் திலகமிட்டுத் தட்டில் வாழைப் பழங்களை வைத்து, தூபங் காட்டிக் கொண்டிருந்தாள் இளமங்கை நல்லாள்.

''நல்ல சகுனம்'' என்று கூறிக் கொண்டே குதிரையினின்று இறங்கினார் நம்பி. வல்லபனும் இறங்கி, நம்பி எதைக் குறித்து அவ்வாறு சொல்கிறார் என்று அறியச் சுற்றுமுற்றும் பார்த்தான்.

மாமரத்தடியில் சோலைத் தேவதை போல் அழகுமங்கை, கோபூஜை செய்வதைக் கண்டான். நம்பி அதைத்தான் சொல்கிறாரோ? சோழ நாட்டில் ஆவினத்துக்கு நல்ல மரியாதை. வேங்கியிலும் இதுபோன்று பசுவுக்கு மரியாதை செலுத்தும் வழக்கத்தை ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணிக் கொண்டான்.

பூஜை செய்து கொண்டிருந்த பெண், புதியதாக அங்கு வந்திருக்கும் வல்லபனை ஒரே ஒரு கணத்தில் விழிக் கோணத்தால் அளவெடுத்து விட்டு, பூஜைப் பொருள்களை அப்படி அப்படியே வைத்து விட்டு வீட்டுக்குள் விரைந்து சென்று மறைந்தாள்.

நம்பி திகைத்தார். இரு கைகூப்பி வாருங்கள் என்று இன்முகம் காட்டித் தன் மகள் வரும் இளவரசரை வரவேற்பாள் என்று நம்பி நினைத்து விட்டாரோ? தாயற்ற அவரது மகள் திலகதேவி, அந்தக் குடிலுக்குத் தலைவிபோல் இருந்து, வீட்டு வேலைகளை ஒன்று விடாமல் ஓய்வு இல்லாமல் செய்து கொண்டிருப்பாள். பணியாட்களுக்கு வேலையிடுவதும் ராஜாங்கக் காரியமாக வரும் அதிகாரிகளுக்குத் தந்தையின் சார்பில் மறுமொழி கூறுவதுமாக, ஓர் ஆண் மகனுக்குண்டான



தைரியத்துடன் விளங்குபவள் இப்போது புதிய ஓர் இளைஞனைக் கண்டவுடன் மின்னலென மறைந்து விட்டாள்.

நம்பி மெல்ல நகைத்துக் கொண்டார். ''பெண்களுக்கே இயற்கையான நாணம் அவளிடம் தோன்றியதில் தவறில்லை. ஆனால், பாதியிலேயே பூஜையை நிறுத்தலாமா?'' என்று மனத்துள் நினைத்துக் கொண்ட நம்பி, ''திலகா, திலகா'' என்று குரல் கொடுத்தார்.

மாமரத்தின் அடியில் இடப்பட்டிருந்த கருங்கல் மேடையில், நம்பியும் வல்லபனும் அமர்ந்தார்கள்.

''இளவரசருக்கு இந்தக் கல் ஆசனம் தான் அளிக்க இந்த ஏழையின் இல்லத்தில் வசதியிருக்கிறது. பொறுத்தருள வேண்டும்'' என்றார் நம்பி.

சோழ நாட்டு சேனைத் தலைவர் இது காறும் மனம் வைத்திருந்தால் பெரிய மாளிகையைக் கட்டியிருக்கலாம். நூறு நூறு பணியாளர்கள் இங்குமங்குமாக நடந்து உற்ற ஏவல்களைச் செய்யக் காத்திருக்குமாறு செய்திருக்கலாம். பொன்னாலான ஆசனங்கள், மாளிகையில் அதிகம் அமைத்திருக்கலாம். ஏனோ நம்பி அடக்கமும், எளிமையும் தம் இல்லத்திலிருந்து முதலில் தொடங்க வேண்டும் என்று எண்ணியிருக்கிறார்.

அது நியாயமானது. எடுத்துக் காட்டு மிக்கது. அரசு அதிகாரிகளைப் போல்தானே மக்கள் வாழ விரும்புவர்? சோழ நாட்டு முதல் அமைச்சர் எளிய முறையில் வாழ்ந்தால் மக்களும் அவ்வாறே வீண் ஆடம்பரங்களைக் குறைத்துக் கொண்டு வாழ்வார்கள். வல்லபன் இவ்வாறு எண்ணிக் கொண்டிருக்கும் போது, ''இளவரசே! பலமான சிந்தனையில் ஆழ்ந்து விட்டீர்கள் போல் தோன்றுகிறது'' என்று கூறி அவனது கவனத்தைத் திருப்பினார்.

''கல் ஆசனம் உறுதியானது. அதில் அமர்ந்து ஆள்பவர்கள் உறுதியுடன் இருக்க வேண்டும் என்று இந்த இருக்கை தெரிவிக்கிறது'' என்று வல்லபன் கூறும்போது நம்பி அவனது முகத்தையும், அவன் பேசும் விதத்தையும் பேச்சிலுள்ள கருத்தினையும் கூர்ந்து நோக்கியவாறிருந்தார்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''பாஸ்!.... பாஸ்!.... பாஸ்!....

''எந்தப் பரீட்சையில்?''

''பரீட்சையா' பஸ் பாஸ்? ரயில் பாஸ் வாங்கிட்டதைச் சொன்னேன்!''



''பாறை என்றும் அழியாதது. உயரிய கலைஞர்கள் தமது நோக்கத்துக்கு ஏற்றவாறு அதை மாற்றி உருப்படுத்துவார்கள். அது போல் சோழ அரியணையும் அழியாதது. அதில் அமரும் மன்னர்கள் உயரிய கலைஞர்களைப் போல், நாட்டைச் செம்மையாக உருவாக்க வேண்டும் என்றும் பொருள் கொள்ளலாம்'' என்று நம்பி கூறியபோது, அவர்கள் பேச்சைத் தடைப் படுத்துவதுபோல் அந்தப் பகல் வேளையிலும் ஒரு பூரணமதி ஒளி கொடுத்தவாறு அங்கு வந்தது.

திலக தேவி ஒரு தட்டில் இரண்டு குவளைகள் நிறைய மோருடன் வந்தாள். அமுத கலசம் ஏந்தி அழகுத் தேவதை பவனி வருவது போல் தோன்றியது.

''திலகா, பாதி பூஜையில் நிறுத்தி விட்டு ஓடி விடலாமா? பூஜையை முடித்துவிட்டு எங்களுக்கு உபசரணை செய்வதை,வந்திருக்கும் விருந்தினர் தவறாக நினைக்க மாட்டாரே?'' என்று கூறி, வல்லபன் பக்கம் திரும்பி நம்பி நோக்கினார். இதுவரையில், திலக தேவியின் எழில் முகத்தையும் அவள் ஒயிலாக நடந்து வந்த நடை அழகையும் குனிந்து அவள் பணிவும் பரிவும் மிக தட்டை நீட்டியதையும், விழிகள் இரண்டும் மிகப் பொல்லாத தனமாக தான் பார்க்காத போது தன்னை நோக்குவதையும், தான் நோக்கும்போது நிலம் நோக்குவதையும், பிறகு இதழ்களில் மெல்லிய பூ நகையை மலர விடுவதையும் ரசித்த வாறிருந்த வல்லபன், நம்பி தன்னை நோக்குகிறாரென்று அறிந்தவுடன், திலக தேவியிடமிருந்து விழிகளைத் திருப்பி, மாமரத்தில் பூத்திருக்கும் மாம் பூக்களையும், பிஞ்சுகளையும் பார்த்து ரசிப்பது போல் நடிக்கலானான்.

''திலகா, வந்தவரை அறிமுகப் படுத்தாமல் இருந்து விட்டேனே! விருந்தாளி என்று சாதாரணமாகக் கூறி விட்டேன். சொல்லப் போனால் நாம்தான் அவரது மிகப் பரந்த சோழ நாட்டின் நிரந்தர விருந்தாளி. அவர் – வல்லபன் – நாளைக்கே பராந்தகன் என்றோ, குலோத்துங்கன் என்றோ, வீர இராஜேந்திரன் என்றோ, இராஜாதிராஜன் என்றோ பட்டப் பெயர் சூட்டப் பெற்று அரியணையில் அமரப் போகிறார். அடுத்த பத்தாவது நாள் பழையாறையில் இவருக்கு இளவரசுப் பட்டம் சூட்டப் போகிறார்கள். கோலாகலமான அந்த விழாவில் கலந்து கொள்ளப் போகிறோம்'' என்று கூறியவுடன், திலக தேவி தனது அகன்ற விழிகளை மடல் அவிழ்ந்த தாமரை போல் மேலும் பரக்க விரித்து, வல்லபன் திருமுகத்தை ஒருகணம் ஆழ நிமிர்ந்து நோக்கி, இதயத்தில் அழியாது பதித்துக் கொண்டாள். அந்தப் பார்வையில் அரச குலத்துக்கு உரிய அசாதாரணமான கம்பீரம் இயற்கையாக அமைந்திருந்தது. மறுகணம் அந்தச் சந்திரவதனி தலை குனிந்து, முகத்தில் செவ்வண்ணம் பரவ, நாணம் அந்தப் பூங்கொடியின் உடலில் பரவ, மான் விழியில் மருட்சி ததும்ப, அதரங்கள் ஆயிரம் ஆயிரம் வார்த்தைகள் கொண்டிருப்பதைச் சொல்ல நினைத்தது போல் துடிக்க அங்கிருந்து துள்ளி ஓடிக் குடிலுக்குள் நுழைந்தாள்.

# கண்டாலே இனிமை கண்ணுக்கு குளுமை

# அதுவே ஐடெக்ஸ் கண்மை



தரமிக்கத் தாவர எண்ணைகளையும், மூலிகைகளையும் மட்டுமே கலந்து விஞ்ஞான முறைப்படித் தயாரிக்கப்படுவது ஐடெக்ஸ்.

பெட்ரோலியம் ஜெல்லியோ, மெழுகோ எந்தவிதமான வர்ணங்களையோ அறவே கலக்காதது ஐடெக்ஸ்.

கண்களுக்குக் கூர்மை, குளிர்ச்சி, கவர்ச்சி அளிப்பதில் நிகரில்லாதது ஐடெக்ஸ்.

35 ஆண்டுகளாக உங்கள் மகத்தான நம்பிக்கையின் ஓர் சின்னம் ஐடெக்ஸ்.




***உங்கள் கண்கள் உங்கள் அழகின் ஜீவநாடி – அதற்கு தரத்தில் நிகரில்லாத கண்மை தேவை. அதாவது ஐடெக்ஸ் கண்மை தான் என்று சொல்லவும் வேண்டுமா ?***

ARAVIND LABORATORIES MADRAS-600 033

# நீங்கள் நிம்மதியாக உறங்க வேண்டுமென்பதற்காக நாங்கள் உறங்காத இரவுகள் பல.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகாப்பு என்பது ஒரு அர்த்தமற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.





ஆம், இன்று இந்நாடு முழுவதிலும் இலட்சக்கணக்கானவர்கள் தங்கள் அன்புக்குரியவர்களான ஆயிரக்கணக்கான பஸ்/லாரி ஓட்டுபவர்கள், பயணிகள் தங்களிடம் பத்திரமாகத் திரும்பி வந்து விடுவர் என அமைதியுடன் நம்பிக்கையோடு உறங்குகின்றனர். சுந்தரம்-கிளேட்டனில், மிகவும் தனித்தன்மை வாய்ந்த இத் துறையில் முன்னோடிகளான நாங்கள், இந்த நம்பிக்கையை அளிக்கின்றோம் (அதிலிருந்து சாலைப் பாதுகாப்பின் புதியதோர் முறை உருவாகிவிட்டது.)

இன்று, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வண்டியிலும் எங்களுடைய காற்றுத் தடை உபகரணங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இத்துடன் நாங்கள் இருந்துவிடமாட்டோம் உங்களது பாதுகாப்பு எங்களுக்கு மிகப் பெரியதொரு பொறுப்பு. (அதற்காக நாங்கள் பல இரவுகள் உறக்கமின்றி உழைக்கத் தயாராக உள்ளோம்).

**உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்**

இன்றைய தொழில் நுணுக்க முன்னேற்றம், ஆராய்ச்சி, தரக்கட்டுப்பாடு, தரச்சிறப்புச் சோதனைகள் (உதாரணமாக ஒரு பிரேக்சேம்பர் டயாஃபரம் பல லட்சக்கணக்கான தடவைகளுக்குமேல் சோதிக்கப்படுகின்றது) — இது போன்ற தொடர்ச்சியான சில வழி முறைகள் மூலம் நாங்கள் பிரேக் சாதனத்தை மட்டும் அளிக்க வில்லை, உங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிக்கும் ஒரு சிறந்த சாதனத்தையே அளிக்கின்றோம்.

**நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம்— அதனைப் பாதுகாக்கவும்**

CD-TVS அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி கொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள். மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்யவேண்டாம். உங்கள் நன்மைக்காகத்தான் சொல்கின்றோம்.

**சுந்தரம்-கிளேட்டன் லிமிடெட்**
பாடி, சென்னை 600 050

**உங்கள் பாதுகாப்பு எங்கள் தொழில்**




SAA SCL 2587

ஆனால் விழிப் பார்வை, உள்ளிருந்து நோக்குகின்றன என்பதை வல்லபன் கவனிக்காதில்லை.

சோழ நாட்டுச் சிற்பிகளின் கைவண்ணத்தை வல்லபன் அறிந்திருக்கிறான். இராஜராஜேஸ்வரக் கோயிலில் எழில்மிகு மங்கையர் சிற்பங்களை அழகு வடிவமாகச் சிற்பி படைத்திருப்பதைக் கண்டிருக்கிறான். இத்தகைய அழகு வடிவங்களைப் படைக்கச் சிற்பிக்குக் கற்பனை எவ்வாறு உதயமாயிற்று என்று அவன் எண்ணியதுண்டு. இப்போதுதான் அவன் அந்த உண்மையை அறிந்து கொண்டான். நம்பியின் மகளைப் போன்ற அழகிகளை மனத்தில் உருவகப் படுத்தி அற்புதச் சித்திரங்களைச் சிற்பி அமைத்தான் என்று அறிந்து கொண்டான்.

குடிலைச் சுற்றிப் பார்க்க வல்லபனை நம்பி அழைத்தார். குடிலைத் தழுவி ஓடும் காவிரி ஆற்றில் சிறிது நேரம் நின்றுவர வல்லபன் விரும்பினான். பொன்னித் தாயின் எழில் கோலங்களைச் சிறிது நேரம் ரசித்து விட்டு வல்லபன் குடிலை அடையும் போது, குடிலில் உள்ள அறையிலிருந்து திலகதேவியும், நம்பியும் பேசும் உரையாடலில் ஒரு பகுதி வல்லபன் செவிகளில் விழுந்தது. வல்லபன் நின்று கேட்டான்.

''சக்கரவர்த்தி மிகத் திறமை மிக்கவர் அப்பா! தகுந்தவரையே இளவரசராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்'' — இது திலகதேவி.

''திலகா, வல்லபன் அதிர்ஷ்டசாலி மட்டுமல்லன். அறிவும், ஆற்றலும் மிக்கவன். வீரமும் அழகும் ஒன்றுகூடியதால் சோழ நாட்டில் மற்றொரு அருள்மொழி வர்மர் பிறந்து விட்டாரோ என்று எண்ணத் தோன்றுகிறது. அவருடைய திருக் கரத்தைப் பிடிக்கும் அதிர்ஷ்டசாலி யாரோ தெரியவில்லை'' — நம்பி பெருமூச்சு விட்டவாறு கூறுகிறார்.

''அப்பா, நான் கோபூஜையை முடிக்கும் சமயம், என் மனத்தில் ஒன்றை வேண்டிக் கொண்டேன். ''கோமாதா இந்தச் சோழ நாட்டு இளவரசியாக ஆகும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? ஏழை தந்தை இந்தச் சாம்ராஜ்யத்தின் வளர்ச்சிக்கு உண்மையுடன் உழைத்து, நாட்டைக் காப்பதற்கு நம்பிக்கையுடன் தொண்டாற்றுவது உண்மையென்றால், அவருக்கு, தாயே, நீ அரச குலத் தொடர்பை ஏற்படுத்திக் கொடு; காமதேனு தாயே, கோமாதா'' என்று உள்ளம் நெகிழ வேண்டிக் கொண்ட அந்தக் கணம் நீங்கள் 'நல்ல சகுனம்' என்று கூறியவாறு வந்தீர்கள். என் மனத்திலும் புதிய ஒளி தோன்றியது. நிமிர்ந்து ஒரே கணம் அவரை நோக்கினேன்'' — திலகதேவி உணர்ச்சி வசப்பட்டுக் கூறுகிறாள்.

நம்பி மெல்ல நகைக்கும் ஒலி கேட்கிறது.

''திலகா, இளவரசரைப் பாதாதி கேசம் நன்றாகப் பார்த்துக் கொண்டாயா? அவரை உனக்குப் பிடித்திருக்கிறதா? இளவரசர் என்பதற்காக அவரை மணம் புரிந்து கொள்வதாக நீ நினைக்கக் கூடாது. உன் மனத்துக்கு அவரைப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்கிறார்.

திலகதேவி நாணத்தால் பேச வார்த்தைகளின்றி ஏதோ கூற முயல்வது மட்டும், ஒலிக் கோவையாகக் கேட்கிறது. நகையொலி எழுகிறது.

''திலகா, இளவரசரை வெளியே காக்க வைத்து விட்டு உன்னுடன் பேசிக் கொண்டிருக்கிறேன். என்றும் மறவாது சிந்தையில் துதிக்கும் தில்லை அம்பல வாணர் அருள் இருந்தால் சோழ அரச குடும்பத்துடன் மணத் தொடர்பு ஏற்படட்டும். சோழச் சக்கரவர்த்தியை இதுபற்றிக் கேட்பதற்கு முன்பு, இளவரசர் வல்லபனையே கேட்கப் போகிறேன். உன்னை அவர் ஒரு முறை காண வேண்டும் என்பதற்காகவே அரச அவைக் கவிஞர் கூத்தர் வீட்டுக்கு அழைத்துச் செல்வதற்கு முன்பு இங்கு அழைத்து வந்தேன். இப்போது கூத்தனூர் செல்கிறோம். திரும்பும் போது ஒரு வேளை, நல்ல செய்தியுடன் நான் திரும்பலாம். சோழ நாட்டின் இளவரசியாக ஆகும் அதிர்ஷ்டம் உனக்கு இருக்க ஆண்டவன் அருளட்டும்'' என்றார்.

நம்பி, குடிலுக்குள்ளிருந்து வெளியே வருவதற்குள், வல்லபன் ஏதும் கேட்காதவன் போல், ஏதும் அறியாதவன் போல் — மரத்தடிக்குச் சென்று விட்டான்.

குழந்தைகளைக் காணக் கூத்தர் வசிக்கும் கூத்தனூர் நோக்கிப் பயணப் படும்போது எந்தக் கணமும், அமைச்சர் பெருமான் நம்பி தன்னிடம் திருமண விஷயமாகப் பேசுவார், தன் மகளை மணந்து கொள்ளுமாறு வேண்டுவார் என்று வல்லபன் எதிர்பார்த்தான்.

நம்பியின் கேள்விக்கு என்ன மறுமொழி கூறுவது என்று வல்லபன் இப்போது சிந்திக்கலானான்.

(தொடரும்)



**திருப்பூரில் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு ஏறத்தாழ (சிறு தொழிற்சாலை உட்பட) 7000 பனியன் தொழிற்சாலைகள் இருந்தன. இப்பொழுது கிட்டத்தட்ட 12000 தொழிற்சாலைகளாக எண்ணிக்கை வளர்ந்து விட்டது.**

திருப்பூர் அலோ

# இது சுபர்ணாவுக்குத் தெரியாது!

அரச மரம்:

அதன் கீழ் உபயோகமற்ற கிணற்றடி மேடை;

சலசலக்கும் இலைகளில் சரிகை இழைக்கும் சந்திரன்.

முன்னால் சிறிய ரயில் நிலையம், பின்னால் ஐயர் ஹோட்டல், கிழக்கிலும் மேற்கிலும் கிராமத்துத் தெருக்கள்.

ரயில் நிலையத்தில் ஏற்றப்படும் தீப்பந்தத்தின் சிவப்பும், இரும்புக் கிராதிகளுக்கு இடையே நகரும் ஸ்டேஷன் மாஸ்டரின் பச்சை விளக்கும், தலையில் நச்சுத் தீ கொண்டு வரும் நாகமாய், 'ஓ'வெனும் எஞ்சினின் ஆரவாரத்தோடு நெளிந்துவரும் எட்டே முக்கால் ரயிலும் சில கணங்களில் தோன்றி மறைந்து விடுகின்றன.

—பிரபஞ்ச அடிப்படை அமைதியில் பச்சையும் சிவப்பும் அற்று, பெரியதும் சிறியதும் அற்று ஐக்கியமாகின்றன.

நான் புறப்படுகிறேன்.

''அம்மா, தாயே ''

நினைத்த மாதிரியே நடக்கிறது. எல்லார் வீட்டுக் கதவும் சாத்தியாகி விட்டது.

பரவாயில்லே. இந்தப் பசியே நல்லது. இதுவே நன்றாய் இருக்கிறது.

ஆமாம், திரும்பிக் கிணற்றடிக்கா போவது? அங்கே பனிவாடையும் குளிரும் தாங்க முடியாதே. இப்படியே, இந்த வீட்டுத் திண்ணையிலேயே படுத்துக் கொள்ளலாம் — இந்தச் சந்நியாச வாழ்க்கையில் கூட உடம்பு எத்தனை வசதி தேடுகிறது.

மனம், பத்து வருடங்களுக்கு முந்திய என் வாலிப கால நினைவுகளில் அலைபாய்கிறது.

கடலால் மஞ்சள் ஆட்டப்படும் ஐ. என். எஸ். 'கல்வாரி'ன் எஞ்சின் அறை.

'டர்பைனி'ன் ஓவென்ற இரைச்சல். உஸ்ஸென்று எங்கோ நீராவி வெளியேறும் சத்தம்.

நான்தான் டியூட்டி ஈ. ஆர். ஓ.

எஞ்சின் அறையில் அத்தனை சத்தத்துக்கும் இடையில் நான் அவளைப் பற்றிய எண்ணங்களிலேயே மிதந்து கொண்டிருக்கிறேன்.

சுபர்ணா.

அவள் ஓர் அழகிய பறவை.

பாரிஸிலுள்ள 'இண்டியன் எம்பஸி'யில் அவளுக்குப் பெரிய உத்தியோகம்.

எனது விடுமுறைகளை அவளோடுதான் அனுபவிக்கிறேன். நினைத்தால் நயாகரா நீர் வீழ்ச்சிக்குப் பறப்போம். சுவிஸ் ஏரிகளில் மிதப்போம்.

'லூசர்னே' ஏரியின் நீலத்தில் சொகுசாக நீந்தி வரும் வெண்பனி அன்னங்கள் அவள் நெஞ்சில் பொற்கவிதைகளை புஷ்பிக்கின்றன. நாங்கள் கெய்ரோவில் அனுபவிக்கும் அராபியன் இரவுகள் அவள் கீட்ஸையும் கீதா ஞானங்களையும் புனருத்தாரணம் செய்கின்றன. அதனால்தான் அவளது ஆங்கிலக் கவிதைகள் ஜேம்ஸ் அல்லெனுடைய புத்தகங்களைவிட அதிகம் விற்பனையாகின்றன போலும்.

நான் தேடி அலையும் மற்றப் பெண்களைவிட சுபர்ணாவின் கூர்த்த நயனக் கொள்ளையில் நான் என்னை இழந்த தருணங்களே அதிகம்.

''சீஃப், அங்கே எக்ஸ்ட்ராக்ஷன் பம்பு கொஞ்சம் தொல்லை கொடுக்கிறது...''

—என்னுடன் இருக்கும் வாட்ச்கீப்பர் வருகிறான்.

உமர்கயாமின் 'ருபயாத்' வரிகளை மனத்தில் பாடியவாறு தொப்பியை அணிந்து கொண்டு அங்கு செல்கிறேன்.

கிழக்கிந்தியத் தீவுக் கூட்டங்களில் ஒன்றான 'கேம்பெல் பே'. — இந்தியாவின் ஹவாய்.

ஜனன தாபத்தைப் போக்கும் சீதளப் பசுமையில் அந்தக் கடற்கரைப் பிரதேசம் குளித்துக் கொண்டிருக்கிறது.

நான் நடந்து கொண்டிருக்கிறேன். கடற்படையில் பணியாற்றும் ஒரு சீஃப் பெட்டி ஆபீசராக நான் அங்கு வரவில்லை. அங்கு நடக்கும் ஒரு beat guard க்கு ரகசியமாக வந்திருக்கிறேன்.



அதோ, பார்ட்டிக்கு வந்திருக்கும் பருவப் பெண்களின் அழகு மயக்கத்தில் அவை என்னுள் ஊறும் வேகம் தாங்காது கண்களைச் சற்று மூடுகிறேன். இமைத் திரையில் பந்தயக் குதிரைகளின் பளபளக்கும் சப்பைகள் நீந்துகின்றன. வேர்வையில் பட்டுப்போல் மின்னும் உரமிக்க கருஞ்சப்பைகள்.

''ஏய் பச்சை ஜுப்பா ''

திடுக்கிட்டுத் திரும்புகிறேன்.

—கீழேயுள்ள சுற்றுப் பாதையில் — லெப்டினெண்ட் கமாண்டர் தயாள் சர்மா.

''நீ வர வேண்டிய இடம் இதுதான் '' தம் ஜீப்பைச் சுட்டிக் காட்டுகிறார். அது என்னை வளைக்க விரைகிறது. நான் ரகசியப் பாதையொன்றில் நழுவுகிறேன்.

தப்பித்தோம் என்ற திருப்தியோடு ஒரு தெரு மூலைக்கு வருகிறேன். அங்கிருக்கும் பான் கடையில் சிகரெட் பற்ற வைப்பது போல் என் மலருக்கு வயர்லெஸ் செய்கிறேன்.

சில கணங்களில் ஒரு ஸ்கூட்டர் வந்து நிற்கிறது. அதில், ரசிக்கத் தக்க ஓர் இளம் பெண்.

'பாட்' புகையால் கடரும் என் பார்வை அவள் கையைப் பிடித்து என்னிடம் இழுத்து வருகிறது.

நான் துரிதமாகிறேன்.

''ஐ நோ வாட் டு யூ நீட்... கம் வித் மி ''

என் உதட்டசைப்பில் உதிரும் கொக்கிகள் அவளை என் பின்னோடு அழைத்து வருகின்றன.

என் கையிலிருக்கும் பார்சல் அவள் கரங்களுக்கு மாறுகிறது.

நான் ஸ்கூட்டரின் பின்னால் உட்கார்ந்து கொள்கிறேன். அவள் வேகமாகக் கிளப்புகிறாள். என்னுள் உஷ்ணம் டரவுகிறது. திடீரென்று எதிரே மூலைக்கும் திரிசூலச் சாலைப் பிரிவில் துப்பாக்கியை நீட்டிக்கொண்டு நிற்கும் லெப்டினெண்ட்-கமாண்டர். இன்னும் இரண்டு கடற்படைக் காவலர்கள்.

ஸ்ரீகௌரி

''ஏய், பச்சை ஜுப்பா ''

நான் உறைந்து விடுகிறேன்.

அவர் துப்பாக்கியை உயர்த்துகிறார்.

ஒரு நொடியில் பக்கத்தில் இருக்கும் தண்ணீர்த் தடாகத்தில் குதித்து மூழ்கி விடுகிறேன்.

**நா**ன்கு லட்சம் பெறுமானமுள்ள ஹெராயின் போதை மருந்து கடத்திய என் குற்றம் நிரூபிக்கப்பட்டு ஏழு வருடச் சிறைவாசம் பெறுகிறேன்.

இது சுபர்ணாவுக்குத் தெரியாது. தெரியவும் கூடாது.

'மை எவர்லாஸ்டிங் லோவ்' என்று அவளால் தன் கவிதைகளில் சிலேடையாக வர்ணிக்கப்பட்ட நான், என் வாழ்க்கையையே கேவலப் படுத்திக் கொண்டதை அறிந்தால் அவள் மலர் இதயம் என்னாகும்? என்னைப் பற்றிய அவளது 'இமேஜ்' எத்தனை அசிங்கப் பட்டுப் போகும்?

என் உல்லாச வாழ்க்கைக்கு இப்படியொரு முடிவா?

என் கண்களில் நீர் திரையிடுகிறது.

லோனவாலாவில் என் நான்காவது வருடப் பயிற்சி முடிந்த போது எங்கள் கமாண்டிங் ஆபீசர் சொல்லியிருந்தார், ''உன் முன் ஒரு பெரிய வாழ்க்கை இருக்கிறது. அதை ஏற்றுக் கொள்வதும் பயன்படுத்திக் கொள்வதும் உன்னையேதான் பொறுத்துள்ளது.''

என் உள்ளம் அழுகிறது.

எனக்காகவே எழுதப் பட்டது போன்ற சுபர்ணாவின் கவிதை வரிகள் என்னுள் எழுந்து சிரிக்கின்றன.

அழகை இனிது ரசிக்கலாம். ஆனால். அதை எனக்குச் சொந்தமாக்கும் முயற்சியில் எத்தனை பெரிய துன்பத்துக்கு ஆளாகி விட்டேன்.

அழகை நாடி அலையும் ஓய்வில்லாத முயற்சியும் — அதன் முடிவும் சிறையில் எனக்குச் சிந்தனை யூட்டுகின்றன. ஸாக்ரமெண்டிலிருந்து இன்ஸ்டைன் வரை கடோபநிஷத்தி



விருந்து மெய்கண்ட சாத்திரம் வரை கற்கிறேன்.

பிறகு, பாம்பே சிறையிலிருந்து விடுதலையாகிறேன்.

பரஞானத்தைத் தேடிப் பனாரஸ் போகிறேன். பத்ரிநாத், கேதார் நாத், ரிஷிகேஷ், ஹரித்வார், கங்கோத்ரி என்று எங்கெல்லாமோ மூன்று வருடங்கள் அலைந்தான பிறகு இந்தத் தென் கோடி கிராமங்களுக்கு வந்து விட்டிருக்கிறேன்.

உலகத்தின் ஒவ்வொரு மூலையிலும் ஆனந்தத்தைத் தேடி அலைந்து விட்டு, தான் தேடுகிற ஆனந்தம் தன்னிடத்தே இருக்கிறது என்ற முடிவுக்கு வந்த பிறகு இதோ, இந்தத் திண்ணைக் குறடுகளில் கோலமிடும் நிலவு வெளிச்சமும் தெருவாசல் வேப்ப மரங்களின் உயிர் மூச்சும் எனக்கு இன்பமாகவே இருக்கின்றன.

''...ம்ம்... இன்று ரொம்ப தூரம் நடந்து விட்டேன்.

கெண்டைக் காலில் வலி மின்னலெடுக்கிறது. வேர்ப்பிரியும் வேதனை வண்டின் ரம்பமாய்த் துளைக்கிறது.

கால்களைக் கையால் அழுத்தி விட்டுக் கொள்கிறேன்.

''ஆங்... அங்கேதான்... இன்னும் மேலே. அப்படியே... அப்படியே...''

—வீட்டுக்குள்ளிருந்து மூடிய கதவுகளைப் பீறிக் கொண்டு வலியின் வேதனை, அது நிரவப்படும் இதம்...

ஓ. வீட்டுக் காரருக்கும் கால்வலி தானோ?

''காலை ஆட்டாமல் அப்படியே வெச்சிக்கோங்க... ம்... இப்போ எப்படி இருக்கு?''

—மனைவியின் இதமான ஒத்தடம்... அன்பான ,செருகைடி... அதில் தோயும் சுகம்...

இதுபோல் என் சுபர்ணாவும்?...

ஆமாம், அன்றோர் இரவு, அவள் எழுதிக் குவித்திருந்த கவிதைகளை நான் டைப் ரைட்டரில் விரல் வலிக்க அடித்து முடித்தபோது. ''வலிக்கிறது'' என்றேன். அவள் என் விரல்களை எத்தனை பரிவோடு நீவிப் பதமாக அழுத்தி விட்டாள் தன் கவிதை நிரம்பிய கனியுதடுகளால்...

ஓ, நான் என்னவெல்லாம் நினைக்கிறேன்?

தாம்பத்யம், சம்சாரம்.

சிச்சி, அரச மரத்தடிக்கே போகலாம்.

'அலையும் மனமே ஆறுத சம்சார விருக்ஷத்துக்கு மூல காரணம்' என்று மொழியும் உபநிஷத வாக்கியத்தை முனகியவாறு எழுந்து நடக்கிறேன்.

பன்னிரண்டரை மெயில், ஸ்டேஷனில் நிற்காமல் சென்று மறைகிறது.

அரசமரம். அதன் கீழ் உபயோகம் கொள்ளும் திண்ணைத்தடி மேடை.

---

# உன் பங்கு என்ன?

**மதிவண்ணன்**

உன் பங்கு என்ன?
உன் பங்கு என்ன?
உருவாகும் புதுநாட்டில் உன்பங்கு என்ன?

பொற்கால ஒளிதோன்ற வேண்டும்! - தொழில்கள்
பொலிவாகக் கால் ஊன்ற வேண்டும்!
முப்போகம் விளைவாக வேண்டும்! - பிறைபோல்
முன்னேற்றம் வந்தாக வேண்டும்! - அதற்கு (உன்பங்கு)

தடையாவும் வென்றாக வேண்டும்! - எதிலும்
தன்னிறைவு பெற்றாக வேண்டும்!
நடைபோடும் புதுவேகம் வேண்டும்! - நானே
நமதென்று இனி ஆக வேண்டும்! - அதற்கு (உன்பங்கு)

தளராத நம்பிக்கை வேண்டும்! - புதுமை
தாகத்தில் செயலாற்ற வேண்டும்!
வெளிநாடும் நமைப்போற்ற வேண்டும்! - ஏழ்மை
விரவாத சமுதாயம் வேண்டும்! - அதற்கு (உன்பங்கு)



அன்று முதல் இன்று வரை நாங்கள் வகிப்பது முதலிடம்

# ஆம், மோபெட்களில் இன்றும் முதலிடம் வகிப்பது சுவேகாதான்

சுவேகாவிற்கு இந்த முதலிடம் ஆரம்ப நிலையிலிருந்தே தொடர்ந்து வருகிறது. இதன் காரணம்—முதல் தர தயாரிப்பான சுவேகா அவ்வப்பொழுது புதிய பல அபிவிருத்திகளைச் செய்து முன்னணியில் நிற்பதே.

சுவேகா: முதன் முதலாக ஹார்டு க்ரோம் அலுமினிய சிலிண்டர்களை உபயோகித்தது—இதன் பலன் நீடித்த உழைப்பு மற்றும் ஆயிரக் கணக்கான அதிகப்படி கி.மீ. ஓட்டம்.

சுவேகா: முதன் முதலாக வண்டியை இலாபகரமாக ஓட்டுவதற்கேற்ப ஆட்டோமாடிக் கிளட்சைக் கொண்டது. நாம் இதனை இயக்க வேண்டாம். நம் களைப்பையும் குறைத்துக் கொள்ளலாம்.

சுவேகாவின் தனிச் சிறப்பு மிக்க வடிவமைப்பு சீரிய சமநிலைத் தன்மைக்கும், முன் மற்றும் பின்பக்க சஸ்பென்ஷன்கள் சொகுசான சவாரிக் கேற்பவும் அமைக்கப் பெற்றவை.

சுவேகா மட்டுமே அளிக்கும் மற்றுமோர் சிறப்பு: விற்பனைக்குப் பிறகு பராமரிப்புச் சேவைக்கான விரிவான அமைப்பு. இந்தியா முழுவதிலும் உறுப்புகள் கிடைக்கும் வசதி.

ஆம், அன்றும், இன்றும், என்றுமே மோபெட்களில் முன்னணியில் இருப்பது சுவேகாதான்!



மோபெட்ஸ் இந்தியா லிமிடெட்

திருப்பதி, ஆந்திரப் பிரதேசம்.

Suvega

தன்னிகரற்ற மோபெடின் மறுபெயர்

SAA/MIL/430

*Studies in Concentration*

# THE DEVOTEE

*The devotee lives in a world of his own. For him music is only an aid to greater absorption in prayer and meditation. Through concentration he tries to realise the Infinite.*

Parry's too, is a long, entrancing story of concentrated effort. Started as a trading concern over 183 years ago, Parry's has, over the years, gradually widened its interests. Its record of expansion has given it new dimensions as a progressive industrial force.

E.I.D.-Parry is an industrial complex, covering Fertilisers, Pesticides, Hybrid seeds, Sugar, Confectionery, Chemicals, Engineering goods, Ceramics and Petro-chemicals. E.I.D.-Parry, with its specialised knowledge, technical know-how and long experience, is geared to play a leading role in national growth. E.I.D.-Parry's marketing organisation, with its after-sales service, is far-flung and dynamic.

**Parry's—pioneers in planned progress**

**E.I.D.-PARRY (INDIA) LIMITED**
Dare House, Madras 600 001



EID 1866

CROSS SECTION

# முன்னேற்றம் எந்த அளவில்?






(1) திருமதி பத்மா கிருஷ்ணமூர்த்தி (2) திரு ஆர். சிவராம் (3) திரு எம். கே. வாசுதேவன் (4) திரு எஸ். ஸ்ரீதரன்

**பத்மா கிருஷ்ணமூர்த்தி**
*(குடும்பத்தலைவி)*

மதுவிலக்கு இப்போது தமிழகத்தில் தீவிரமாக்கப் பட்டுள்ளதால் கல்லூரி ஸ்பெஷல் கிளாஸ் முடித்து விட்டு வரும் என் மகளைப் பற்றிய கவலை இருப்பதில்லை. இது குறித்து உண்மையாகவே மகிழலாம். ஆனால் மற்றப்படி விலைவாசியைப் பார்த்தால் அம்மாடியோவ் சமையல் காஸ் கிடைப்பதே அரிதாக உள்ளது. இதற்குப் பதிலாக உபயோகப்படுத்தும் கிரெஸின், ரேஷன் கார்டுக்கு ஆறு லிட்டர் கொடுக்கிறார்கள். எங்களைப் போன்ற குடும்பங்களுக்கு எப்படிப் போதும்? இந்தப் பற்றாக்குறையின் முடிவு—ஆபீஸ் போகும் நேரத்தில் எனக்கும் அவருக்கும் அடிக்கடி சண்டை.

சோப்பு, அரிசி, பருப்பு வகைகள் முதலியவற்றின் விலைகளைக் கேட்டாலே பயமாக இருக்கிறது. காய்கறி விலையும் எப்போதும் சீராக இருப்பதில்லை. தண்ணீரைப் பொறுத்த மட்டில் வரும் நேரத்தில் பிடித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

தமிழ் நாடு பால் வள நிறுவனத்தின் பால் சப்ளை பாதி நாட்களில் தாமதம்தான். இந்த அழகில் பால் கிடைக்காத நாட்களுக்குப் பணத்தைத் திரும்பக் கொடுப்பதுமில்லை. முக்கால்வாசி நாட்களில் பாலில் ஒரு குமட்டும் வாடை உள்ளது.

ஜூன் மாத தலைவலி, பள்ளி, கல்லூரிகளுக்கு இடம் பிடிக்கும் படலம். டொனேஷன் என்ற பெயரால் அடிக்கும் கொள்ளைக்கு அளவே கிடையாதா?

விலைவாசி குறைந்தால்தான் தமிழகம் முன்னேறியுள்ளது என்று சொல்லலாம்.

**ஆர். சிவராம்**
*(வேலை தேடும் பட்டதாரி இளைஞர்)*

படித்து முடித்த கையோடு வேலை தேட ஆரம்பித்த எனக்கு இன்னும் பட்டம் கைகொடுத்து உதவவில்லை. எந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் விளம்பரம்-கொடுக்கும் முதலாளி வர்க்கத்தினர் மனுச் செய்யும் வாலிபர் பெரிய படிப்புப் படித்திருக்க வேண்டும், அதிக வருடங்கள் வேலை அனுபவம் வாய்ந்தவராக இருக்கவும் வேண்டும் என்று கேட்டுள்ளார்கள். அவர்கள் கணக்குப்படி பார்த்தால் படிக்கும் பருவம் முதலே இளைஞர்கள் வேலையிலும் இருந்திருக்க வேண்டும். நினைக்கவே வேடிக்கையாக இருக்கிறது. இத்தகைய தகுதியோடும் தப்பித் தவறி ஒருவர் இருந்து மனுச் செய்து கொண்டால் வேண்டுபவர், வேண்டாதவர் என்ற பாகுபாடு குறுக்கிடுகிறது. 'சிபாரிசு' என்ற வார்த்தைக்குத்தான் என்ன காந்த சக்தி! "பட்டதாரி இளைஞர்கள் நாட்டின் முதுகெலும்பு மாதிரி. அவர்களுக்கே வேலை கொடுத்து நாட்டை எல்லாத் துறைகளிலும் வளமாக்க வேண்டும்" என்று அரசியல்வாதி பேசுவதோடு சரி. இந்த நிலையில் பட்டம் எதற்கு? கல்யாண அழைப்பிதழில் போடத்தான் உபயோகப்படும். எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் பட்டதாரியின் பெயரைப் பதிவு செய்வதோடு கதை முடிந்து விடுகிறது.

வேலை வாய்ப்புகள் பெருகும் வகையில் கொள்கை வகுத்துத் திட்டம் தீட்டி அமல்படுத்தினால்தான் தமிழகம் துரித முன்னேற்றமடைய முடியும்.

**எம். கே. வாசுதேவன்**
*'விவேகானந்தா கல்லூரி பொருளாதாரப் பேராசிரியர்'*

தமிழ்நாடு பொருளாதாரத்தில் மிகுந்த முன்னேற்றம் அடைந்துள்ளது. விவசாயம், கல்வி, தொழில்கள் மிகவும் வளர்ச்சியடைந்துள்ளன. ஆந்திராவை அடுத்து இந்தியாவிலேயே தமிழகத்தில்தான் அரிசி உற்பத்தி அதிகம். நமது தேவை போக மற்ற மாநிலங்களுக்கும் நாம் அரிசி வழங்குகிறோம்.

# முன்னேற்றப் பொன்மொழிகள்

தன்னுடைய முன்னேற்றத்தை மதித்துத் தன்னையே பின்தொடர்ந்து செல்லும் எந்தச் சமுதாயமும் வாழ்வடையும்.
—நெப்போலியன்

உயர்ந்த நோக்கங்கள் உயர்ந்த முன்னேற்றங்களை அமைக்கின்றன.
—எமர்ஸன்.

நாமே முன்னுக்கு வருவதைவிடப் பிறர் முன்னுக்கு வருவதற்காக ஒரு சாதனமாக நாம் அமைவது அதைவிட எத்தனையோ மடங்கு மேலானது.
—இளை அறிஞன்.

அஞ்சாத தைரியமே முன்னேற்றத்தின் ஊற்றாகும்.
புளூட்டார்க்.

முன்னேற்றமான ஒரு காரியத்தை நான் விரும்பி விட்டேனென்றால் ஒரு சதுரங்கக்காரனுடைய காயை நகர்த்திச் செல்வதுபோன்று எதிர்ப்புக் களைத் தகர்த்துக்கொண்டு இலக்கை நோக்கி முன்னேறிக் கொண்டிருப்பேன்.
—பென் ஜான்ஸன்.
—எஸ். கே. சண்முகம்.



சிறு தொழில்கள் வளர்ச்சியிலும் தமிழகம் மேலோங்கி உள்ளது. நமது தமிழகக் கலைப் பொருள்களுக்கு ஈடு எந்த மாநிலத்திலும் இல்லை. கலைப்பொருள்கள் அதிகமாக ஏற்று மதியாகின்றன. நமது இசைக்கருவிகள் அயல் நாடுகளில் ரொம்பப் பாப்புலர்.

கனிவள உற்பத்தியில் தமிழகம் பின்தங்கி உள்ளது. உதாரணத்துக்குச் சேலம் உருக் காலையைக் குறிப்பிடலாம்.

ஐ. நா. வல்லுனர்கள், காவிரி நீரத்தில் எண்ணெய் உள்ளதாகக் கூறுகிறார்கள். இதை மேலும் ஆராய்ந்து வெற்றி பெற்றால் தமிழகம் அமோக வளர்ச்சி பெறும். அந்நியச் செலாவணி மிச்சமாகும்.

தமிழ்நாடு, தொழில்துறை வளர்ச்சியில் இந்தியாவிலேயே முதல் இரண்டு மூன்று ஸ்தானங்களுக்குள் இருக்கிறது. சமீப காலமாகச் சிறிது மந்த நிலை அடைந்திருந்தாலும் உற்பத்தி அளவிலோ, திறனிலோ, தமிழகம் பின்தங்கி விடவில்லை.

நீர்வளமோ, இயற்கைத் துறைமுகமோ, மின்சார உற்பத்தியோ இங்கு அதிகமாக இல்லாதிருந்தும் தமிழகம் சிறப்பு நிலையைப் பெற்றுள்ளது. கங்கா–காவிரி திட்டம் வெற்றி பெற்றால் நீர்வளம், மின்சார உற்பத்தி போன்ற அம்சங்களிலும் தமிழகம் மேலும் சிறக்கும்.

அரசியல் தலையீடு காரணமாக, சரியான திட்டங்கள், சிறப்பாக அமல்படுத்தப்படாமல் (உ-ம்) காவிரி நீர்ப்பங்கீடு, சேலம் உருக்காலை) தொழில் முன்னேற்றத்தில் தடை ஏற்பட்டுள்ளது. இக்குறையை நீக்க அரசு அரும்பாடு படவேண்டும்.

**எஸ். கிரிதரன்**
*(பேப்பர் போடுபவர்)*

கடந்த பத்து ஆண்டுகளாகத் தமிழகத்தில் எந்தவித முன்னேற்றமும் இல்லை என்பது என் கருத்து. விலைவாசி மேன்மேலும் விஷம் போல ஏறிக் கொண்டே போகிறது. பேப்பர் போடும் எனக்கு ஆங்கிலப் பேப்பருக்கு ஐந்து பைசாவும், தமிழுக்கு நான்கு பைசாவும் கொடுக்கிறார்கள். அதிகப்படியாக ஒரு நாளைக்குக் கூலி ஐந்து ரூபாய் கிடைக்கும். இந்தநிலையில் வசதியான வாழ்க்கை எங்களைப் பொறுத்தவரை ஒரு கனவுதான்.

எங்கள் முகத்தை எந்த வீட்டாரும் பார்ப்பதில்லை, காரணம் விடியற்காலையிலேயே எங்கள் தொழில் தொடங்கி, முடிவடைகிறது. நாங்கள் எங்கள் பணியைச் செய்யும் போது சற்றுத் தாமதம் ஏற்பட்டாலும் வாடிக்கைக்காரர்கள் பெரிதாகக் கூச்சல் போடுகிறார்கள். எங்களையும் மனிதர்களாகக் கருதினால் இந்தத் தொல்லைகளுக்கு இடமே இராது. உடம்பு சரியாக இல்லையென்றாலும், வெளியூர்களுக்குச் செல்ல வேண்டுமானாலும் மற்றவர்களைப் போல எங்களுக்கு விடுமுறை கிடையாது. தமிழகம் முன்னேறுகிறதோ இல்லையோ, எங்களைப் போன்றவர்கள் வாழ்க்கையில் ஒரு முன்னேற்றமும் காணோம்!

பேட்டி: ''**சிக்கி.**''

# GOLDEN OPPORTUNITY!

**சிறந்த பயிற்சி!** **மிகக் குறைந்த கட்டணம்!!**

**'C' குரூப் வகுப்புகள் ஆரம்பம்: 5-7-1979**

உத்திரவாதத்துடன் 1979-80ம் வருட கீழ்க்கண்ட தேர்வுகளுக்கு தபால் மூலம் மாதமிருமுறை பாடங்கள் அனுப்பிப் பயிற்சி அளிக்கப் படுவதுடன் சேலம், சென்னை சென்டர்களில் நேர்முக வகுப்புகளும் நடத்தப்படுகின்றன.

1. M.B.A., M.B.M., A.M.I.B.M., A. M. I. B. A., L.L.B., B.L. LAW DIPLOMA & B.Ed. (பட்டதாரிகள் தகுதியுடையவர்கள்). 2. MYSORE M.A., B.A., & B.COM (தமிழ் ஆங்கிலம் எழுதப் படிக்கத் தெரிந்தவர்கள் தகுதியுடையவர்கள்). 3. S.V., B.A. & B.COM. 4. BHOPAL I.A. & I. COM (S.S.L.C. மெட்ரிக் தேறியவர்கள் தகுதியுடையவர்கள்). 5. COM. INTER, D.COM.,B.COM., B.COM (Hons.), M.COM (S.S.L.C., S.S.C., P.U.C. H.S.C., Kerala Compartmental, S.S.L.C. Engineering Diploma தேறியவர்களும் தவறியவர்களும் தகுதியுடையவர்கள். 6. ஆந்திரா மெட்ரிகுலேஷன், P.U.C., INTER. 7. E.S.L.C. 8. விவசாயம். 9. கைத்தறி நெசவு. 10. போஸ்ட்மேன்-போஸ்டல் கிளார்க். 11. கிராம மணியம்-கர்ணம். 12. சர்வீஸ்கமிஷன் (Oct.79). 13. பேசிக் ஆங்கிலம்-பிரிமெட்ரிக். 14. அக்கவுண்டன்ஸி. 15, ஹோமியோபதி. 16. B.A., M.A., (one sitting) உஸ்மானியா & உத்கல் யூனிவர்ஸிட்டி.

குறிப்பு: சேலம், சென்னை, கிளை அலுவலகங்களில் நேர்முக வகுப்புகள் நடத்தப்படுவதுடன் Typewriting & Shorthand வகுப்புகளும் விரைவில் ஆரம்பிக்கப்பட விருக்கின்றன.

**தமிழகத்தின் தனிப்பெரும் தபால் கல்வி ஸ்தாபனம்!**
**(RECOGNISED & AFFILIATED BY I.A.E., I.B.A.M. & Com UNIVERSITY)**

முழு விவரங்களுக்கு ரூ. 2/- M. O. அனுப்பவும்

# ஸ்ரீ முருகன் டுடோரியல் இன்ஸ்டிடியூட்

(Estd: 21-3-1952 Govt. Regd. No. 3072)

ரிஷிவந்தியம் - PIN: 606 205 - தெ. ஆ. மாவட்டம் - தமிழ் நாடு

கிளைகள்: சென்னை, சேலம், மலேசியா, சிலோன், தென் ஆப்ரிக்கா, மாரிஷியஸ், இந்தோனேசியா, அந்தமான்.

SALEM BRANCH: 29, தர்ம விலாஸ் பங்களா, ஜங்ஷன், சேலம்-636005

**MADRAS REGIONAL OFFICE:**
107-A, ARCOT ROAD, MADRAS-600024

—OM SRI




கோடையிலே இளைப்பாற
குளிர் தருவும்
தரு நிழலும் போல்
—வறுமை
கோடையிலே இளைப்பாற
தமிழக அரசு
பரிசுச் சீட்டும்
அது தரும்
பரிசுத் தொகையும்

ஒவ்வொரு வரிசையிலும்
இரண்டு முதற்பரிசுகள்
ஒவ்வொன்றும் ரூபாய்
50,000

3 இரண்டாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் ரூபாய்
10,000.

5 மூன்றாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் ரூபாய் 5,000.
மேலும் ஏராளமான இதர பரிசுகள்.

மொத்த பரிசுகள் : 7,965.

மொத்தப் பரிசுத் தொகை
ரூ. 11,70,000.

குலுக்கல் நாள் : 20.6.79.

பரிசுச் சீட்டின் விலை ரூ. 1/-



வெளியிட்டோர் :
இயக்குநர்,
தமிழ்நாடு பரிசுச் சீட்டுத் திட்டம்
சென்னை 600 002.

ELEGANT



கிருஷ்ணகிரி தொழிற்பேட்டை.

# சிறு தொழில்கள் – ஒரு கண்ணோட்டம்

திரு. எம். எஸ். பார்த்தசாரதி, தமிழ் நாடு சிறு தொழில் சங்கத் தலைவர் கூறுகிறார் :

''1955 ஆம் ஆண்டு நம்நாட்டு பொறியியல் பட்டதாரிகள் எப்படித் தொழிற் கூடம் அமைக்கலாம் என்று சிந்தித்துக் கொண்டிருந்தபோது அப்போதைய மந்திரி திரு டி. டி. கிருஷ்ணமாச்சாரி இதற்கு அமெரிக்காவிலிருந்து யோசனை நல்க போர்டு குழுவை வரவழைத்தார். இதுதான் சிறு தொழிலின் ஆரம்ப காலம். அப்போதைய சித்தாந்தம், ''உங்கள் கருவிகளைக் கொண்டு வாருங்கள், அரசு வேறு தொல்லையில்லாமல் எல்லா உதவியும் செய்யும்'' என்பதுதான். இதன் எதிரொலியாக நூற்றுக் கணக்கான சிறுதொழிற் பேட்டைகள் இந்தியாவில் கட்ட ஏற்பாடுகள் ஆரம்பமாயின. தமிழகத்தைப் பொறுத்தவரை கிண்டி, அம்பத்தூர், மதுரை தொழிற்பேட்டைகள் உருவாயின. இதற்கு அப்போதைய மந்திரி திரு ஆர். வெங்கட்ராமன் பெரிதும் உதவினார்.

சிறு தொழில்களின் மூலம் பெருந்தொழில்களைவிட மூன்று மடங்கு வேலை வாய்ப்புக்களை வழங்க முடியும். பொறியியல் படித்தவர்கள் அரசின் உதவியுடன் சுய வேலைவாய்ப்பு பெறச் சிறு தொழில் திட்டம் உதவுகிறது. இதன் மூலம் செய்யப்படும் பொருள்கள் தரத்தில் சிறந்து விளங்குவதோடு விலையும் குறைவாக உள்ளது. எந்தெந்த மாநிலங்களில் சிறு தொழில்துறை அதிகாரிகள் பெருமுயற்சி செய்தார்களோ, அம்மாநிலங்கள் வேகமாக முன்னேறின.

இன்றைய தேதியில் சிறு தொழில்களில்தான் 40 சதவீதம் தொழிலாளர்கள் ஈடுபட்டுள்ளார்கள்.

சிறு தொழில்கள் இரண்டாவது மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டங்களின் போது அமோகமாக வளர்ந்தன. நான்காவது ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டங்களின்போது தேக்கம் ஏற்பட்டது. இதற்கு முக்கிய காரணம் பெரும் தொழிலுக்கும் சிறுதொழிலுக்கும் ஒரே மாதிரியாக மிகக் கெடுபிடியான சட்டங்கள் இருந்ததுதான். 1970 முதல் சமீப காலம் வரை சுமார் பத்து ஆண்டுகளில் சிறுதொழில் வளர்ச்சி சரியாகக் கவனிக்கப்படவில்லை என்பது என் சொந்த அபிப்பிராயம். சிறு தொழில்களுக்கு வங்கிகள் பணமுதலீட்டைக் கால தாமதமாகக் கொடுக்கிறது. அதிலும் வட்டி மிகவும் அதிகரித்து உள்ளது. 1969ல் 7½ சதவீதமாக இருந்தது 1978ல் 23 சதவீதமாக உயர்ந்துள்ளது. விநியோகத்துக்கும், ஏற்றுமதி செய்யவும் சரியான வசதி செய்யப்படாததால் நடுத்தரகர்கள் விலையை அதிகப்படுத்தி லாபம் சம்பாதிக்கிறார்கள்.

சிறு தொழில்களுக்கு ஊக்கம் கொடுத்தால் விலைவாசி நிச்சயமாக இறங்கும்.

வங்கிகள் சிறு தொழில்களுக்குச் சரியாக உதவுவதில்லை. பேசும் போது ஒரு நபரின் நாணயத்தையும், பண்பையும் பார்த்துப் பண உதவி அளிப்பதாகக் கூறும் வங்கிகள் உண்மையில் அவரின் சொத்தின் மதிப்பைப் பார்த்துத்தான் உதவி செய்ய முன் வருகின்றன. மின்சாரப் பற்றுக்குறையினாலும் கச்சாப் பொருள்கள் கிடைக்காமலும் அவதிப்படும் சிறு தொழிலதிபரிடம் கூட நிர்ப்பந்தப் படுத்தித் தவணைப் பணம் வசூலிக்கிறார்கள்.

திரு எம்.எஸ். பார்த்தசாரதி



இதை ஈடுசெய்யச் சிறுதொழில் நிறுவனங்கள் ஒரு நாளைக்குச் சுமார் பதினாறு மணிநேரம் வரை உற்பத்தியில் ஈடுபட வேண்டியிருக்கிறது.

தற்போதைய தமிழக முதல்வர் திரு. எம். ஜி. ஆர். சிறு தொழில் முன்னேற்றத்துக்காகப் பல வகையில் உதவிகளைச் செய்துள்ளார். சில கிராமப் பகுதிகளில் தீப்பெட்டித் தொழிற்சாலை துவக்கி வேலை வாய்ப்பையும் கொடுத்து, அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தியுள்ளார்.

சிறு தொழில்கள் துரித வளர்ச்சியடைய மாநிலச் சட்டங்களில் எவை பாதிக்கிறதோ அவற்றை நீக்க வேண்டும். தேவையற்ற சட்டங்களைக் குறைக்கவும் வேண்டும். உற்பத்தியில் கவனம் செலுத்த முடியாமல் தொழிலதிபரை அலைக்கழிக்கும் சட்டங்கள், விதிமுறைகள் முதலியன குறைக்கப் பட வேண்டும். கச்சாப் பொருள்கள் இரும்பு, அலுமினியம் முதலியவை நியாய விலைக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். சிறு தொழில் துவங்கப் போகிறவரின் மனுவை உடனே பரிசீலனை செய்து உதவ வேண்டும். இவற்றை அரசு கவனித்து நடவடிக்கை மேற்கொண்டால் சிறுதொழில்கள் துரித வளர்ச்சியடையும்.

இந்தியாவிலேயே மிக அதிகமான பொறியியல் நிபுணர்கள் தமிழ்நாட்டில்தான் உள்ளார்கள். ஒரு நல்ல திட்டத்தை வகுத்தால் இங்கு இன்றுள்ள நாற்பதாயிரம் சிறுதொழிற் கூடங்கள் ஐந்து வருடங்களில் இரண்டு லட்சமாகப் பெருக வாய்ப்புண்டு.

பேட்டி : ராமச்சந்திரன்

# தமிழகச் சிறப்புக்கள்

வேறு எந்த மாநிலத்துக்கும் இல்லாது தமிழகத்துக்கு உள்ள ஒரு சிறப்பு :

சுதந்திர இந்தியாவில் மிக முக்கிய பதவியான நிதி மந்திரி பதவியை வகிக்க மூன்று நபர்களை வழங்கியது.

1. திரு. ஆர். கே. ஷண்முகம் செட்டியார்
2. திரு. டி. டி. கிருஷ்ணமாச்சாரி
3. திரு. ஸி. சுப்ரமணியம்

-வி. ராஜலக்ஷ்மி

* ஆசியாவிலேயே தமிழகத்தில் மட்டுமே உள்ள சில சிறப்பான அம்சங்கள் :

1. Integral Coach Factory ரயில் பெட்டி தொழிற்சாலை
2. செயற்கை வைர தொழிற்சாலை
3. Christian Mission Hospital Vellore

* நோபல் பரிசு பெற்ற தமிழர் சர். ஸி. வி. ராமன்

உலகில் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட நூல் 'திருக்குறள்'

- வி. ராஜலட்சுமி







## செந்தமிழ்க் கோவை

கோவைக் கடைகளின் பெயர்ப் பலகைகளில் காணகின்ற ஆங்கிலப் பதங்களின் தமிழாக்கம் சிறப்பாக அமைந்துள்ளன. உதாரணத்துக்குச் சில :

Bakery .. அடுமனை
Lorry Service சரக்குந்து கணியம்
Stationery Shop எழுதுபொருளகம்
Textiles .. நூற்பகத்தார்
Cloth Shop .. துணியகம்

— எஸ். கோபால்

**காகிதம் செய்வோம்...**
**மேலும்—**

எங்கள் ஆலையில் அனேகமாக எல்லாரக காகிதங்களையும் அட்டைகளையும், உபயோகிப்போரின் தனித்த தேவைகளுக்கு ஏற்ப, தயாரிக்கிறோம். ஏனெனில், காகிதக் குழம்பு முதல் வெண்மைக் காகிதம் வரை உற்பத்தி செய்ய எல்லா பகுதிகளையும் கொண்டு அமைந்துள்ளது எங்கள் ஆலை.

**எங்கள் பணி அத்துடன் நிற்பதில்லை,**
**காகிதத்தைக் கடந்து சிந்தித்து—**

இதோ
- ☐ காகித உற்பத்தி ஆலைகளை — சிறிதும் பெரிதும் — நிறுவ, எல்லா பொறியியல் பணிகளையும்செய்து முடித்துத் தருகிறோம்.
- ☐ நொடித்துப்போன, பழுதான அல்லது மூடப்பட்ட காகித ஆலைகளை உயிர்ப்பித்து இயக்கித் தருகிறோம்.
- ☐ நச்சுக் கலப்பு — காற்றிலும், நீரிலும் — எங்கள் பெரும் கவலையாகும். எங்கள் ஆலையிலேயே, கழிவு நீரில் வெளிப்படும் நஞ்சைக்களைய மாபெரும் திட்டம் வகுத்து, முதற்கட்டத்தையும் முடித்து இயங்கச் செய்துள்ளோம்.

எனவேதான்,

**காகிதத்துடன் நின்றுவிடவில்லை எம்பணி எனக் கூறுகிறோம்.**



The Watermark of Quality

# சேஷசாயி பேப்பர் அண்டு போர்ட்ஸ் லிமிடெட்

ஈரோடு - 638007



அகில இந்திய ''சி. ஏ. ஐ. ஐ. பி.'' தேர்வில் தமிழ் நாட்டைச் சேர்ந்த புவராஜ் முதல் மாணவராக வெற்றி பெற்றுள்ளார். கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தமிழக மாணவர் எவரும் இப்பெருமையை அடைந்ததில்லை.

தற்போது இவர் ''ஸ்டேட் பாங்கி'' அதிகாரியாகப் பணியாற்றி வருகிறுர். புவராஜ், திருச்சி ஜோசப் கல்லூரியில் எம். எஸ். சி. படித்து, சென்னைப் பல்கலைக் கழகத்திலேயே முதல் மாணவராகத் தேர்வு பெற்றவர். இதேபோல் எஸ். எஸ். எல். சி. தேர்வில் கீழ்த் தஞ்சை மாவட்டத்தில் முதல் மாணவராகத் தேர்வு பெற்ருர். புவராஜ் செஸ் விளையாட்டிலும் சாம்பியன்.

(ஆதாரம் 24.4.79 தினத்தந்தி - மதுரைப் பதிப்பு)

— முத்து. தங்க ஐயப்பன்

## தமிழகம் சிறக்க...

தனியார்த்துறை, அரசுத்துறை, கூட்டுத்துறை, கிராமத்தொழில் துறை, சிறு தொழில் துறை ஆகிய பிரிவுகளில் இயங்கும் தொழிலகங்களுள் மாதிரிக்குச் சில:

1. திருச்சி பி. எச். இ. எல். பாய்லர் தொழிற்சாலை.
2. ஸ்பிக் நிறுவனத்தின் ஒரு தோற்றம்
3. உதகை ஹிந்துஸ்தான் போட்டோ பிலிம் தொழிலகம்.

















4. டபிள்யூ. எஸ். இன்சுலேட்டர்ஸ்.

5. ஏற்றுமதியாகும் அசோக் லேலண்ட் பஸ்.

6. டி. ஐ. டைமண்ட் செயின் நிறுவனத்தின் உட்புறத் தோற்றம்.

7. திருவள்ளூர் ஹிந்துஸ்தான் மோட்டார்த் தொழிலகம்.

8. மேட்டூரில் கெம்ப்ளாஸ்ட் நிறுவனம்





குஜராத்தில் பெண்கள் கோயிலுக்குச் செல்லும்போது அங்கே உள்ள பசுவிற்குப் புல் ஊட்டிய பிறகு தான் ஆலயத்தில் நுழைகின்றனர்.

ஏழைப் பெண்கள் சிலர் கோவில் வாசலில் தங்கள் பசுக்களைக் கட்டி விடுகின்றனர். சற்று தூரத்தில் அவர்களே புல்கட்டு வியாபாரமும் செய்கின்றனர். கோயிலுக்கு வருபவர்கள் அவர்களிடம் விலைக்குப் புல் வாங்கி அவர்களுடைய மாடுகளுக்கே போடுவார்கள்!

தேவகோட்டை பி. நாராயணன்




9. செயற்கைச் சந்திரன் மூலம் செய்தித் தொடர்பு கொள்ளத் தமிழகத்தில் தயாரான ஒரு நடமாடும் கேந்திரம். சிறு தொழில் கூடத்தினர் தயாரிப்பு.

10. பொம்மைகள் தயாரிப்பில் கைவினைஞர்கள்.

11. தஞ்சையில் உருவாக்கப்படும் ஓர் உலோகச்சிலை.

12. கண்ணாடிப் பொருள்கள் தயாரிப்புக்கும் பயிற்சி நிலையம், முதன் முதலாகச் சென்னையில் உருவாகியுள்ளது.









டைரக்டர்: "'பெண் மேலே வெயில் அடிக்குது' — இதுதான் நம்ம படத்தின் பெயர்!"

தயாரிப்பாளர்: "இந்தப் பெயர் வேண்டாங்க. கொஞ்சம் புதுமையா..."

டைரக்டர்: "சரி! அப்ப 'வெயில் மேலே பெண் அடிக்குது'னு மாத்தி வச்சுக்கிடுவோம்!"

தயாரிப்பாளர்: "ஓ. கே.!"

— உ. ராஜாஜி



Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600 032. Editor: K. Rajendran

# கவருங்கள்!
# கவருங்கள்!!

உங்கள் மனம் கவர்ந்தவனை கவருங்கள். சாரதா'ஸுக்கு வாருங்கள். அங்கு இருக்கும் வண்ண வண்ண பட்டுச் சேலைகளின் கடலில் மூழ்கி உங்கள் மனம் கவர்ந்தவரை கவரும் வண்ணத்தை எடுங்கள். அவர் முகம் மகிழ்ச்சியால் பூரிக்கட்டும். உங்கள் மனம் மலரட்டும்.

சாரதா'ஸ் பட்டுச் சேலைகள்
மங்களகரமானவை
உங்கள் மனம் கவர்ந்தவரை.
கவரும் சக்தி வாய்ந்தவை.



# சாரதாஸ்

(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

| | |
|---|---|
| தன் பில்டிங் | |
| மவுண்ட் ரோடு | N.S.B. ரோடு |
| சென்னை-600 002 | திருச்சி-620 002 |
| போன் : 87177 | போன் : 27077 |

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு

## சிறந்த டிவி வாங்க சீரானதோர் வழி

# முதலில் மற்ற டிவி விளம்பரங்களை விடாது படிக்கவும். பின் பாரத் டிவியில் ஒரே ஒரு நிகழ்ச்சியைப் பார்க்கவும்.



மற்ற டி.வி. விளம்பரங்கள் வெறு சாதாரண அம்சங்களைப் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. பாரத் டி.வி.யைப் பற்றி நாங்கள் சொல்வது ஒன்றே. நீங்களே பார்த்து அதன் சிறப்பை ஒப்புக்கொள்வீர்கள்.

அருமையான, கண்கூடாக உணரவல்ல சிறப்புகள் ஆறு அமைந்தது–

## பாரத் டிவி

**ஹெச்.ஏ. எல்லின் நிபுணத்துவம்:** நாட்டிலேயே நிகரில்லாதது. மிகவும் முன்னேற்றமான ஐ.ஸிக்கள். பாரத் டிவியின் துல்லிய ஒளி வடிவங்களுக்கும், நிகரில்லா நாதத்துக்கும் முக்கியமானவை.



**துல்லியமான ஒளிபரப்பு:** 150 கிலோ மீட்டர் தொலைவில்கூட வேலூர், சிதம்பரம், புதுவையிலும் சென்னை தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை ரசிக்க உங்களுக்குத் தேவை பாரத் டி.வி.



**நாதபோகம்:** ஒலிபரப்புக்கு மட்டுமே ஒரு ஐ.ஸி. அதிக ஒலி அளிக்கும் சிறப்பான இரு ஸ்பீக்கர்கள்.



**நீடித்த நல்லுழைப்பு:** ஒளிபரப்புக் கருவி (பிக்சர் டியூப்), மற்ற உறுப்புகளும்கூட நீடித்த நல்லுழைப்பை உருவானவை. "கான்ட்ராஸ்ட் கன்ட்ரோல்" ஸ்விச்சை 30-35% அளவில் உபயோகித்தாலே போதும்! மின் விநியோகத்திலுள்ள ஏற்றத்தாழ்வுகள் பாரத் டி.வி.யை பாதிக்கமுடியாது. மின் கட்டணமும் மிகக்குறைவு — மாதத்திற்கு ரூ. 5 - தான்.

**பரவசமூட்டும் புற அழகு:** "ஸிரமல்" மற்றும் "மித்ரி" கைவினை கொஞ்சும் மரக்காபினெட்கள். புற எழிலே இத்தனை சிறப்பென்றால், உள் உறுப்புகள் ஒப்புயர்வற்றவைகளாகத்தானே இருக்க முடியும்.

**சீர்செய்பணி (சர்விஸ்):** சிறப்பான பிரின்டெட் சர்க்யூட், தொழிற்சாலையிலே சிறப்பான பயிற்சி பெற்ற இஞ்சினியர்கள். எமது நம்பிக்கையான சர்விஸிங்கின் இரகசியம் இதுவே.



## பாரத் டிவி

விற்பனை அலுவலகம் & சர்வீஸ் சென்டர்:
பாரத் டெலிவிஷன் லிமிடெட்
(APSSIDC-ன் கூட்டு நிறுவனம்)
6, நுங்கம்பாக்கம் ஹைரோடு,
சென்னை-600 034.
போன்: 86527

பதிவுபெற்ற அலுவலகம் & தொழிற்சாலை:
பாரத் டெலிவிஷன் லிமிடெட்
1-10-63, ராக்லேண்ட்ஸ்
பேகம்பேட், ஹைதராபாத்-16.
போன்: 77040, 73621

அருகிலுள்ள டிவி டீலரிடம் பாரத் டிவியில் ஒரு நிகழ்ச்சியைப் பாருங்கள்!

ACIL BT 28/79 TM